SHB2/NGB-83 B TM

## ஒரு உண்மைத் தோழனுக்கு நிகரானது. நேஷனல் & கிரிண்ட்லேஸ் சேமிப்புக் கணக்கு

ஒரு சேவிங்ஸ் பாங்கு கணக்கு எப்படி ஆரம்பிக்கிறது என்று கவலையா? உங்கள் சேமிப்புகள் கணக்கில் கட்ட முடியாத அளவிற்கு சொற்பமென்று கருதுகிறீர்களா ?

நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்கில் உங்களுக்கு எல்லா உதவிகளும் ஆலோசனையும் கிடைக்கும். ஒரு கணக்கு ஆரம்பிக்க ரூ. 5/-இருந்தால் போதுமானது.

எனவே உங்கள் அருகாமையிலுள்ள கிளைக்கு சீக்கிரம் செல்லுங்கள் எம்மிடம் ஒரு சேவிங்ஸ் கணக்கு வைத்துக் கொள்வது ஆபத்திற்கு உதவும் நண்பனாக எவ்வாறு விளங்குமென்பதைக் கண்டுகொள்ளுங்கள்.

உங்கள் சேமிப்பு எவ்வளவு குறைவாக இருந்தாலும் நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் உங்களுக்கு அளிக்கும் கௌரவம் பெரிது.



## நேஷனல் அண்ட் கிரிண்ட்லேஸ் பாங்க் லிமிடெட்

(இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது. அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

கிளைகள் : சென்னை : 3, நார்த் பீச் ரோடு; 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, (லாயிட்ஸ் கிளை); 6, அரமனைக்காரத் தெரு; 158, மவுண்ட் ரோடு; தூத்துக்குடி : 44, பீச் ரோடு; ஹைதராபாத் : அபித் ரோட்

அசோசியேட்ட பாங்குகள் : லாயிட்ஸ் பாங்கு லிமிடெட்•நேஷனல் புரோவின்ஷியல் பாங்க் லிமிடெட்



# கல்கி

## பொருளடக்கம்

குரோ பங்குனி 22 ❀ ❀ ❀ ❀ ❀ ஏப்ரல் 4






● ''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.


நாட்டின் பொருளாதாரம்
என்னென்னமோ செய்கிறேன், சிரிப்பே இல்லையே!
1965 பட்ஜெட்


பெர்மிட்
காங்கிரஸ் அரசாங்கம்
தேசிய உடைமை
நவீன ஸம்ஹார மூர்த்தி


நேரு, நேரு, நேரு, நேரு, நேரு...
பிராயச்சித்தம்


"குற்றம் சாட்டுகிறோம்..."
நேர்மையின் குரல்
கவலை எதற்கு, வோட்டுப் பலம் இருக்கும் போது...?
PK



மலர் 24 ● இதழ் 36

# இந்தியாவின் பொறுப்பு

பெரிய யுத்தம் மூண்டாலும் பாதகமில்லை என அமெரிக்கா துணிந்து, தெற்கு வியட்நாமில் கம்யூனிஸ ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போரிட முடிவு செய்து விட்டது. இதனால் நேரிடக்கூடிய எல்லா பலாபலன்களையும் ஆராய்ந்த பின்னரே ஜனாதிபதி ஜான்ஸன் அவர்கள் இவ்வாறு முடிவு செய்துள்ளார். அமெரிக்காவின் நடவடிக்கைக்கு இந்தியா ஆதரவு தர வேண்டுமா, அல்லது வழக்கம் போல் தனது 'நடு நிலைமை'க் கொள்கையைப் பின்பற்றிப் பேசாதிருக்க வேண்டுமா என்பதே கேள்வி.

அமெரிக்காவின் கம்யூனிஸ எதிர்ப்புக்கு இந்தியா ஆதரவு தராவிடில், அது ஒரு நெருக்கடியான தருணத்தில் அமெரிக்காவைக் கைவிட்டதாகவே ஆகும்; கம்யூனிஸ சீனா ஆசிய நாடுகளை விழுங்கத் தங்கு தடையின்றி வழி செய்ததாகவும் ஆகும்.

நாம் மட்டுமே சமாதானப் பிரியர்கள் என்றெண்ணிச் செருக்கடைய வேண்டியதில்லை. அமெரிக்காவிலும் சமாதானத்தை விரும்பும் பலர் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் ஜனாதிபதியிடம், 'ஏன் இப்படி நேரடி யுத்தக் கொள்கையைப் பின்பற்றுகிறீர்கள்? கம்யூனிஸ்ட்களுடன் பேச்சு வார்த்தை நடத்தி சமரஸம் செய்து கொள்ள முடியாதா?' என்று கேட்கிறார்கள். ஜனாதிபதி ஜான்ஸன் அவர்களுக்கும் தற்போது ஆசிய நாடொன்றில் அமெரிக்காவின் சக்தியைச் செலவழிப்பதைவிட முக்கியமான பல உள்நாட்டுப் பிரச்னைகள் இருக்கின்றன. நீக்ரோ உரிமைப் பிரச்னையைத் தீர்ப்பதுடன் அமெரிக்காவின் செல்வச் செழிப்பைக் குலையாது காக்கும் பெரும் பொறுப்பு அவருக்கு உள்ளது. இதை அவர் நன்கு அறிவார். எனவே யுத்தமின்றி, பேச்சு வார்த்தைகளின் மூலமே தெற்கு வியட்நாம் பிரச்னையை உண்மையாகவே தீர்க்க முடியுமெனில் அமெரிக்க ஜனாதிபதி போர் நடவடிக்கையை மேற்கொள்ளவே மாட்டார்.

'ஆனால் பேச்சுவார்த்தை நடத்தி எடுக்கிற முடிவுகளை கம்யூனிஸ்ட்கள் விரைவிலேயே காற்றில் பறக்க விட்டு விடுகிறார்கள் என்பதுதான் சரித்திரம் கூறும் உண்மை. 1954ல் கம்யூனிஸ்ட்கள் செய்து கொண்ட உடன்படிக்கையினால்தான் வடக்கு வியட்நாமில் பூரண ஆதிக்க உரிமை பெற்றனர். ஆனால் கம்யூனிஸ ஏகாதிபத்திய வெறி அதோடு அடங்கிவிடவில்லை; உடன்படிக்கையை மீறி இப்போது தெற்கு வியட்நாமையும் கபளீகரம் செய்யத் தொடங்கி விட்டது. சீனாவும் அதன் பிடியிலுள்ள வடக்கு வியட்நாமும் 1954ம் வருஷத்திய ஒப்பந்தத்தை மதிக்க முன் வருமாயின் இப்போதே போர் நின்றுவிடும்.

பழைய ஒப்பந்தத்தை விட்டுப் புதிதாகப் பேச்சு வார்த்தை நடத்துவதெனில், கம்யூனிஸ ஆட்சிக்கு மேலும் சில பகுதிகளைப் பலியிட்டாக வேண்டும். முன்பு செய்ததுபோல் மறுபடியும் ஒப்பந்தத்தை முறித்துத் தெற்கு வியட்நாம் முழுவதையும் ஆக்கிரமிக்கச் சீனா முற்படும். புதிய ஒப்பந்தம் செய்து கொள்வதாலோ, அமெரிக்கப் படைகளைத் தென் வியட்நாமிலிருந்து அப்புறப்படுத்துவதாலோ ஏற்படக்கூடிய நிச்சயமான



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி — பாப்பா
— பாரதியார்

விளைவு இதுதான். இதேபோல் மற்ற நாடுகளிலும் அமெரிக்கா நேரடியாகத் தலையிட முடியாது என்ற உறுதியைப் பெற்ற சீனா வெகு விரைவிலேயே தெற்காசியா முழுவதையும் விழுங்கத் தொடங்கிவிடும்.

எனவே சமாதானப் பிரியர்கள் தங்களது சமாதானப் பேச்சு கம்யூனிஸ ஏகாதிபத்திய வெறிக்குச் சாணை பிடிக்கிற காரியமாகவே முடியும் என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். இரண்டாம் உலக யுத்தத்தின்போது தென் கிழக்காசியாவை ஜப்பான் வசப்படுத்திக் கொள்ளக் கூடாது என்பதற்காக அமெரிக்கா ஜப்பானுடன் போர் புரிந்ததல்லவா? அதே போல், அதே காரணத்துக்காக இப்போது சீனாவுடன் அமெரிக்கா நேரடியாகப் போரிட்டுத்தானாக வேண்டும் என்பதை நாம் உணர வேண்டும். கம்யூனிஸத்துக்கு எதிரான கொள்கைகளுக்கெல்லாம் உலகப் பிரதிநிதியாக விளங்கும் அமெரிக்கா தற்போது வியட்நாமை விட்டு வெளியேறுமானால், அதே காரணத்துக்காக ஆசியாவில் எங்கு கம்யூனிஸ ஆக்கிரமிப்பு ஏற்பட்டாலும் அங்கு உதவிக்கு வரமுடியாது. வியட்நாமை விட்டு அமெரிக்க ராணுவம் வெளியேற வேண்டும் என்பவர்கள் ஆசியாவை விட்டே அமெரிக்க உதவி வெளியேற வேண்டும் என்று தான்கூறுகிறார்கள். 'வியட்நாம் போர் முடிய வேண்டும்' என்று அமெரிக்காவிலும், மற்ற இடங்களிலும் கூறுகிறவர்கள் இந்த உண்மையைக் கண்டாலும் காணா விட்டாலும் இதுவே யதார்த்த நிலையாகும்.

வியட்நாம் போர் அமைதியான முறையில் முடிவதற்கு ஒரே வழி 1954ம் வருஷத்திய ஒப்பந்தத்தைச் சீனா மதிக்குமாறு செய்வதுதான். அது முடியாத காரியம் என்பதால் அமெரிக்கா போர்நிறுத்தம் செய்ய வேண்டும் என்பது கம்யூனிஸ ஏகாதிபத்தியத்துக்கு ஊன்றுகோல் அளிக்கும் செயலேயாகும்.

வடக்கு வியட்நாம் உணவுப் பஞ்சம் காரணமாகவே தெற்கு வியட்நாமின் மீது படையெடுத்துள்ளது என்று சிலர் எண்ணுகிறார்கள். உணவு கிடைக்க வேண்டுமெனில் கம்யூனிஸ ஆக்கிரமிப்பு முடிந்தாலே போதும். தென்வியட்நாம் வடநாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொண்டு உதவிகள் அளிக்க முன்வரும். ஆனால் வட வியட்நாம் மக்களின் வயிற்றுப் பசியைவிட கம்யூனிஸ்ட் ஆட்சியின் ஏகாதிபத்தியப் பசியே படையெடுப்புக்குக் காரணம். அமெரிக்காவைத் தெற்கு வியட்நாமிலிருந்து வெளியேற்ற வேண்டும் என்பதே சீனாவின் விருப்பம். 'அமெரிக்கா வெளியேறிய பின்பே பேச்சு வார்த்தை நடத்துவோம்' என்று கூறி, அதன்பின் அமெரிக்காவின் எதிர்ப்பு இல்லாமல் வெகு எளிதில் ஒவ்வொரு ஆசிய நாடாக வென்று தனியரசு செலுத்த வேண்டும் என்பதே கம்யூனிஸத் திட்டம்.

அமெரிக்காவிலும், அமெரிக்காவின் நேச நாடுகளிலும் 'சமாதானப் பிரியர்'கள் இருக்கின்றனர் என்பதை அறிந்து சீனா புதுத் தெம்பு பெற்று வருகிறது. கம்யூனிஸப் படையெடுப்பை விடாது தொடர்ந்தால், சிறிது காலத்துக்குப் பின்னரேனும் சமாதானப் பிரியர்களின் உந்தல் தாங்காமல் ஜான்ஸன் பின்வாங்கி விடுவார் என்றே சீனா ஆவலாக எதிர்பார்க்கிறது. இந்த ஆவலுக்கு ஆதரவாகவே 'நடு நிலைமை' நாடுகளும் நடந்து வருகின்றன.

இவ்விடத்தில்தான் இந்திய சர்க்கார் நம் கண்டனத்துக்கு ஆளாகிறது. உலக நலனைக் கருதாவிடினும் இந்தியாவின் நலனை மட்டுமே கருதியாயினும் நாம் அமெரிக்க நடவடிக்கையை ஆதரிக்க வேண்டியது அவசியம். அமெரிக்கா வேறு வேலையின்றியோ, விளையாட்டுக்காகவோ அல்லது தன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்கோ இப்போது போரில் இறங்கியிருக்கவில்லை. முழு வியட்நாமும் கம்யூனிஸத்துக்கு இரையானால் அதைத் தொடர்ந்து லாவோஸும் கம்போடியாவும் தாய்லாந்தும் பர்மாவும் கம்யூனிஸ பூதத்துக்கு அடிபணியும் என்பதாலேயே அமெரிக்கா நேரடிப் பிரவேசம் செய்திருக்கிறது. அமெரிக்க எதிர்ப்பு இல்லாவிடில் கம்யூனிஸ சாம்ராஜ்யம் எவ்வித எதிர்ப்புமின்றிப் பாரத தேசத்தின் முன் வாசலுக்கே வந்துவிடும்.

இதை உணர்ந்து, அமெரிக்காவை ஆதரிக்க வேண்டியதே இந்திய சர்க்காரின் பொறுப்பு. போரில் அமெரிக்கா விஷவாயுவை உபயோகிக்கிறதா என்பதை உறுதி செய்து கொள்ளாமலே அமெரிக்காவைக் கண்டிக்க முற்பட்டுள்ள இந்திய சர்க்கார், கம்யூனிஸ விஷவாயு ஆசியா முழுவதிலும் பரவி வருவதை உணர்ந்து அமெரிக்க நடவடிக்கையை ஆதரிக்க வேண்டியது கடமை.

தருமபுரியில் ஏப்ரல் மாதத்தில் நடைபெறும் இடைத் தேர்தலில் வாக்காளர்கள் மொழிப் பிரச்னையை மனத்தில் நினைவு வைத்து, தில்லியில் அதிகாரத்திலிருக்கும் காங்கிரசாருக்குத் தமிழ் மக்களின் உணர்ச்சியை வெளிப்படுத்த வேண்டும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி




★ தியாகத்தின் சக்தி
★ கேரள விவசாயிகள்
★ ருஷ்யாவின் ஏமாற்றம்
★ ராஜ்ய சர்க்காரின் கடமை

நிரந்தரமான காரணங்களின் மீது எழுந்த ஆட்சி மொழி எதிர்ப்பைத் தாற்காலிகமாக நிறுத்தி வைப்பதால் அதன் சக்தி குன்றிவிடுமென அஞ்ச வேண்டியதில்லை. காரணங்கள் நிரந்தரமாக நியாயமானவையான படியால் எப்போது இயக்கத்தை மீண்டும் தொடங்கினாலும் அது சக்தி பெறும். இளைஞர்கள் தங்களது இயக்கத்தின் ஐக்கியம் குலையாமல் காத்துக் கொள்வதும், பலாத்காரத்தைவிடத் தியாகத்தின் சக்தியே பெரிதென உணர்வதும்தான் வெற்றியின் தேவைகள்.

ஃ ஃ ஃ

முன்பு இந்திய சர்க்காரின் வெளி விவகாரப் பிரதம காரியதரிசியாக இருந்த ஆர். கே. நேரு அவர்கள், ஆசிய — ஆப்பிரிக்க நாடுகளிடையே இந்தியா பெற்றிருந்த மதிப்பு 1958லிருந்து குறைந்து கொண்டே வந்து தற்போது மிகவும் தாழ்ந்த மட்டத்துக்கு வந்து விட்டது என்றார்.

ஆசிய — ஆப்பிரிக்க நாடுகளில் மதிப்பைக் குறைத்துக் கொண்டதற்கு ஈடாக மேல் நாடுகளில் நம் மதிப்பைப் பெருக்கிக் கொண்டிருந்தாலும் நன்றாயிருந்திருக்கும். அப்படியும் நடக்கவில்லை.

சர்க்காருடைய பலவீனங்களைப் பத்திரிகைகள் வெளிப்படுத்துவதால்தான் இந்தியாவின் மதிப்புக் குறைந்து போயிற்று என்று ஸ்ரீ ஆர். கே. நேரு சமாதானம் சொல்கிறார். இது சரியல்ல. விவேகமான நற்செயல்களால்தான் ஒரு நாடு மதிப்புப் பெற முடியும்; வறட்டுத் தற்பெருமையாலோ, உண்மைக்கருத்தை அடக்குவதாலோ அல்ல.

**சத்யமேவ ஜயதே — ந அந்ருதம்**
உண்மை ஒன்றே வெல்லும்—பொய் வெற்றி பெறாது

ஃ ஃ ஃ

கேரளத்தின் எல்லையும், தமிழகத்தின் கன்னியாகுமரித் தாலுகா எல்லையும் தொடுகிற இடத்தில் சில கேரள விவசாயிகளுக்கு இரண்டு ராஜ்யங்களிலுமே வயல்கள் இருக்கின்றன. அடுத்தடுத்து உள்ள கிராமங்களில் ஒருவருக்கே சொந்தமாக உள்ள இந்த நிலங்களின் மகசூலை ஓரிடத்திலிருந்து இன்னொரிடத்துக்குக் கொண்டு வரக் கூடாது என்பது சர்க்காரின் உணவுக் கொள்கை! இதன் விளைவாக நேர்ந்துள்ள அதிகாரிகளின் மடமையையும், கொடுமையையும் விளக்கிக் கேரள விவசாயிகள் பிரதமருக்கு மகஜர் விடுத்திருக்கிறார்கள்.

போக்குவரத்துத் தடைகளைச் சட்டபூர்வமாக ஆக்கிவிட்ட படியால் இரக்கமற்ற கட்டுப்பாடுகளை விதிக்க வசதியாயிருக்கிறது. உணவு மண்டலக் கட்டுப்பாடு யாவுமே தவறானவை யெனில், ஒரே சொந்தக்காரர் பயிர்களை எல்லை தாண்டிக் கொண்டு வரக் கூடாதென்பது அசல் கொடுங்கோன்மையாகும்.

ஃ ஃ ஃ

'இன்னும் சில ஆண்டுகளுக்குள் அமெரிக்கப் பொருளாதாரத்தை ருஷியப் பொருளாதாரம் மிஞ்சி விடும்' என்று 1961ல் ஸோவியத் ருஷியா பெருமைப்பட்டுக் கொண்டது. ஆனால் கடந்த மூன்றாண்டில் ஏற்பட்ட உண்மை நிலை என்ன என்பதைப் பார்ப்போம்:

1961ல் அமெரிக்காவின் மொத்த உற்பத்தியின் மதிப்பு 54,000 கோடி டாலர்கள். அப்போது ருஷியாவின் மொத்த உற்பத்தியின் மதிப்பு 26,400 கோடி டாலர்கள்.

மூன்றாண்டுகளுக்குப்பின் 1964ல் அமெரிக்காவின் உற்பத்தி 62,300 கோடி டாலர்; ருஷியாவின் உற்பத்தி 28,700 கோடி டாலர்.

முன்பு ருஷியாவைவிட 27,600 கோடி டாலர் மதிப்புக்கு அதிக உற்பத்தி செய்து வந்த அமெரிக்கா இப்போது ருஷியாவைவிட 33,600 கோடி டாலர் மதிப்புக்கு அதிக உற்பத்திப் பெருக்கம் கண்டிருக்கிறது. அதாவது ஏற்றத்தாழ்வு அமெரிக்காவுக்கு மேன்மேலும் சாதகமாகியுள்ளது. ருஷியாவின் ஏமாற்றம்தான் இப்போது அது லாப நோக்கத்துக்கு இடமளிப்பதன் காரணம்.

ஃ ஃ ஃ

தமிழ் நாட்டுச் சட்டசபையில் முதன் மந்திரி கூறியுள்ளவற்றிலிருந்து அவர் நிரந்

ந்தர இருமொழித் திட்டத்தையும் கைவிட்டு விட்டார் என்று தெரிகிறது. அரசியல் சாஸனத்தைத் திருத்த முடியாது என்ற 'மேலிடத்து'க் கருத்தை ஸ்ரீ பக்தவத்ஸலம் அவர்களும் ஒப்புக்கொள்ள நேர்ந்துவிட்டது! ராஜ்ய சர்க்காரின் அதிகாரம் பூரணமாகத் தில்லிக்குப் போய் விட்டது! ராஜ்ய அரசாங்கம் மக்கள் நலனைப் பிரதிபலிக்காமல் மத்திய சர்க்காருக்குக் கட்டுப்பட்டே நடக்க வேண்டுமென்பது காங்கிரஸ் கட்சிக் கட்டுப்பாட்டின் விளைவு.

இரு மொழித் திட்டம் காரியசாத்திய மானதல்ல. அந்தத் திட்டம் அமுலாகாது என்பதற்காக விசனிக்க வேண்டியதில்லை. ஆனால் முதன்மந்திரி நிரந்தர இருமொழித் திட்டத்தை விட்டதற்குக் காரணம் அதி

# அன்பார்ந்த நேயர்களுக்கு

'கல்கி'ப் பத்திரிகையைத் 'தமிழர்களின் சொந்தப் பத்திரிகை' என்று குறிப்பிடுவது வழக்கம். மக்களின் நலனே மட்டுமே கருதி, அதை நூற்றுக்கு நூறு உண்மையாக வெளியிடுவதால் தான் 'கல்கி'ப் பத்திரிகை 'தமிழர்களின் சொந்தப் பத்திரிகை' என்ற புகழைப் பெற்றிருக்கிறது.

'பிரியமானது', 'நன்மையைத் தருவது' என்று இரு விஷயங்களை உபநிஷதம் கூறுகிறது. பிரியமானவை யாவும் நன்மையைத் தரும் என்று கொள்ள முடியாது. அத்தகைய சந்தர்ப்பங்களில் பிரியமானதை விட நன்மையைச் செய்வதே தருமம். மக்களுக்குப் **பிடித்த** விஷயங்கள் எவை என்று மட்டும் பாராமல், மக்கள் நலனுக்கு **உகந்த** விஷயங்கள் எவை என்பதைச் சீர்தூக்கிப் பார்த்து நன்மைக்குகந்த விஷயங்களைத் திரமாக எடுத்துச் சொல்லி அவைகளில் மக்களுக்குப் பிடித்தம் ஏற்படுத்தித் தருவதே பத்திரிகைத் தருமம். பலருக்குப் பிடிக்காத விஷயங்களைச் சொல்வதால் ஏற்படும் எதிர்ப்பையும், கண்டனத்தையும் பொருட்படுத்தாமல், சந்தர்ப்ப வாதத்தை விடுத்து சத்திய வாதம் செய்வதே பத்திரிகைத் தருமம். சத்தியத்தின் திருவுருவாகத் திகழும் ராஜாஜியின் சக்தியால் 'கல்கி'ப் பத்திரிகை இந்தத் தரும நெறியை வழுவாது பின்பற்றி வருவதை எளிமையுடன் எண்ணிப் பெருமை கொள்கிறேன்.

எதிர்ப்பைப் பொருட்படுத்தாமல், சத்தியமாகப் பட்டதை மட்டுமே 'கல்கி' கூறி வருவதற்குக் காரணம் மக்கள் நலனில் அதற்குள்ள ஈடுபாடுதான்.

கடந்த இருபத்து நான்கு ஆண்டுகளாகத் தமிழகத்துக்கும், தமிழ் மக்களுக்கும், தமிழ் இலக்கியத்துக்கும் 'கல்கி'ப் பத்திரிகை செய்துள்ள அளப்பரிய சேவை குறித்து நான் புதிதாக இப்போது ஏதும் சொல்ல வேண்டிய அவசியமில்லை. 'கல்கி'யின் சாதனைகள் அதன் வளர்ச்சியில் முக்கிய பொறுப் பேற்று வரும் உங்களுக்கே மிக நன்றாகத் தெரிந்தவைதாம்.

தமிழர்களின் நலனில் 'கல்கி'க்கு உள்ள ஈடுபாட்டுக்குச் சமமாக 'கல்கி'யின் நலனில் தமிழர்களுக்கும் ஈடுபாடு உண்டு என்பதையும் பல சமயங்களில் கண்டு மகிழ்ந்திருக்கிறேன். எத்தனையோ இன்னல்களுக்கு ஆளானபோதிலும் 'கல்கி'ப் பத்திரிகை இன்றுவரை பெற்றுள்ள சீரும் சிறப்பும் மக்களின் இதயம் கனிந்த ஆதரவில் பிறந்தவையே என்பதை நன்றிப் பெருக்குடன் நினைந்து மகிழ்கிறேன்.



ஆளும் கட்சியினரின் டம்பாச்சாரித் திட்டங்களைப் பற்றியும் அவற்றின் விளைவாக விலைவாசிகள் மக்கள் தாங்க முடியாத அளவுக்கு உயர்ந்து வருவது பற்றியும் எத்தனையோ முறை கூறியிருக்கிறோம். ஆனால் அப்போதெல்லாம் மக்களுக்கு நேரக்கூடிய துன்பத்தைப் பற்றித்தான் எடுத்துச் சொன்னோமே தவிர அதே காரணங்களால் 'கல்கி'ப் பத்திரிகையும் பாதிக்கப்படுவதை வெளியிடவில்லை. ஆனால் இப்போது அதையும் தெளிவாக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது.

இப்போது 'கல்கி'ப் பத்திரிகைக்கு ஒரு மகத்தான இடுக்கண் ஏற்பட்டுள்ளது. ஒரே கல்லில் இரண்டு மாங்காயை வீழ்த்துவது போல் கருத்துச் சுதந்திரத்தை வளர்க்கும் பத்திரிகைகளின் வளர்ச்சியைத் தடுப்பதற்கும், அரசாங்கத்தின் டம்பாச்சாரிச் செலவினங்களுக்குப் பொருள் தேடுவதற்கும் இசைவாகத் தில்லி சர்க்கார் சமீபத்தில் ஒரு காரியம் செய்திருக்கிறது. பத்திரிகைக் காகிதம் உள்பட இறக்குமதியாகும் பொருள்களுக்கெல்லாம் வரியை அதிகமாக்கிவிட்ட காரணத்

லுள்ள தவற்றை அவர் கண்டதல்ல. கட்சிக் கட்டுப்பாட்டுக்காகவே தம் யோசனையை மாற்றிக்கொண்டு விட்டார்.

இருமொழித் திட்டத்துக்குப் பதில் ஹிந்தி இல்லை என்கிற நிலை ஏற்படப் போவ தில்லை; 'ஹிந்தி மட்டுமே' என்கிற முடி வுக்கு இது கொண்டு போய் விடும். பார்லிமென்டில் ஆள்கிற கட்சிக்குள்ள மெஜாரிட்டி பலம் காரணமாக ஆட்சிமொழி விஷயத்தில் அரசியல் சாஸனத்தைத் திருத்த இயலாது என்பது உண்மை. ஜனநாயகத்தில் இந்த நிலைமை ஏற்பட்டால் கொள்கைகளை விட்டு விடுவது மூன்று கோடி மக்களின் பிரதிநிதியான ராஜ்ய சர்க்காரின் தருமம் அல்ல. விட்டுக் கொடுக்காமல் போராட வேண்டியதே அதன் கடமையாகும்.

---

திலும் பத்திரிகைகளின் அடக்க விலை உயர்ந்துவிட்டது. இதைத் தவிர, விலைவாசிகளின் உயர்வுக்கேற்ப 'கல்கி'ப் பத்திரிகையின் நிர்வாகச் செலவுகளும் பல இனங்களில் உயர்ந்துகொண்டு வருவதால் பத்திரிகையை நேர்மையான முறையில் தொடர்ந்து நடத்த வேண்டுமெனில் 'கல்கி'யின் விலையை உயர்த்துவது தவிர வேறு வழியே இல்லை.

**புத்தாண்டு மலராக வெளிவரவிருக்கும் ஏப்ரல் 11ந் தேதி இதழிலிருந்து 'கல்கி'யின் தனிப் பிரதி விலையை முப்பது காசிலிருந்து முப்பத்தைந்து காசுக்கு உயர்த்துகிறோம். தனிப் பிரதியின் உயர்வுக்கேற்பச் சந்தாத் தொகையும் உயரும்.**

'கல்கி' தமிழ் மக்களுக்குத் தொடர்ந்து தொண்டு செய்ய இந்த விலை உயர்வு தவிர்க்க முடியாத அத்தியாவசியத் தேவையாகி விட்டது என்பதை வாசக அன்பர்கள் உணர்ந்து, இதுகாறும் எத்தனையோ இடையூறுகளின்போது கல்கியை ஆதரித்தது போல இனியும் விலை உயர்வைப் பொருட்படுத்தா மல் தொடர்ந்து ஆதரிப்பார்கள் என நம்புகிறேன்.

'கல்கி'யின் விலை இரண்டணாவாக இருந்த காலத்திலும் சரி, முப்பது காசாக இருந்த காலத்திலும் சரி, வாசக அன்பர்கள் தாங்கள் கொடுத்த தொகைக்குப் பிரதியாகப் பெரும் மதிப்புள்ள ஒரு பொருளைப் பெற்ற திருப்தியை அடைந்து வந்தார்கள். இனியும் அப்படியே மனத் திருப்தி பெறுவார்கள் என்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

வாசகர்கள் வாரந்தோறும் படித்துப் பயனுறும் 'ராஜாஜியின் கருத்துக்கள்', திருமுருக கிருபானந்தவாரியார் ஸ்வாமிகளின் 'கந்தன் கருணை' ஆகிய வழக்கமான சிறப்பு அம்சங்களைத் தவிர 'கல்கி' புத்தாண்டு மலரிலிருந்து இன்னும் பல சிறப்பு அம்சங்களை அறிமுகம் செய்கிறேன்.

அரசியல் வாழ்வையும், சமூகச் சூழ்நிலையையும் பின்னணி யாகக் கொண்டு, நேற்று — இன்று — நாளை என்று மூன்று பாகங்களாகத் திரு **கி. ராஜேந்திரன்** வழங்கும் **'காலச் சக்கரம்'** என்ற புதுமையான தொடர்கதை புத்தாண்டு மலரில் ஆரம்பமாகிறது. வாசகர்களிடையே 'காலச் சக்கரம்' ஒரு பெரும் பரபரப்பை — ஏன், சர்ச்சையைக் கூட — உண்டு பண்ணப் போகிறது.

மர்மக் கதை, சித்திரத் தொடர் இவ்விரண்டிலும் வாச கர்களுக்கு உள்ள ஆர்வத்தை ஒருங்கே பூர்த்தி செய்யும் வகை யில் **'அவன் எங்கே?'** என்ற சித்திரத் தொடர்-மர்மக் கதையை **'கௌசிகன்'** அளிக்கப் போகிறார்.

அனவரதமும் மாறிவரும் நவீன மோஸ்தர்களை விளக்கும் **'இன்றைய நாகரிகம்'** என்ற மனத்தைக் கவரும் அம்சம் அடுத்த இதழில் தொடங்குகிறது.

**தமிலன்** வழங்கும் **'க்யூ வரிசைக் கதைகள்'** புத்தாண்டில் 'கல்கி' தரும் மற்றொரு புது அம்சம்.

**'சித்திரக் களஞ்சியம்'** என்ற அற்புதமான நகைச்சுவைப் பகுதியின் மூலம் 'கல்கி'ப் பத்திரிகை தனது ஹாஸ்யத் துறைப் பணியை அரிய முறையில் விஸ்தரிக்கப் போகிறது.

'கல்கி' புரியவிருக்கும் பணிகள் யாவும் தடையுறாமல் நிறைவேற விநாயகப் பெருமானின் அருளையும் உங்கள் அனை வரின் ஆதரவையும் வேண்டுகிறேன். வணக்கம்.

சதாசிவம்

* பிரியமானவை யாவும் நன்மையைத்
* தரும் என்று சொல்லமுடியாது.
* சத்தியமான சந்தர்ப்பங்களில் பிரியமானதைவிட
* நன்மையைச் செய்வதே தருமம்.

★
★★

தனிப் பிரதி

**விலை 35 காசு**

**ஆண்டுச் சந்தா**

| | |
|---|---|
| இந்தியா<br>இலங்கை | 18-00 |
| பர்மா<br>மலேசியா<br>வெளி நாடுகள் | 25-00 |

# ஈழத்தை வாழ்த்துகிறோம்

கம்யூனிஸ்ட் சீனவுக்கு ஒரு விசைப் பலகையாக இலங்கையை மாற்றுவதில் முனைந்திருந்த ஸ்ரீமதி சிரிமாவோ பண்டார நாயகாவின் கட்சிக்குத் தோல்வி தந்த ஈழ மக்களைப் பாராட்டுகிறோம். டட்லி சேன நாயகா அவர்களின் ஐக்கிய தேசியக் கட்சி அடுத்த இலங்கை சர்க்காரை அமைக்கும் என்றறிந்து மகிழ்கிறோம். இது கம்யூனிஸ விஸ்தரிப்பைத் தடுக்கும் என்பதோடு ஈழத் தமிழரின் பிரச்னைக்கு நியாயமான தீர்வு பிறக்கவும் உதவுமென நம்புகிறோம். முன்பு ஐக்கிய தேசியக் கட்சியின் ஆட்சியில் ஸர் ஜான் கொத்தலாவல அவர்கள் நேருஜியுடன் இந்தப் பிரச்னைக்கு முடிவு காண மனப்பூர்வமாக முயன்றதை நாம் மறக்கவில்லை.

சேனநாயகாவின் கட்சி பெரிய மெஜாரிட்டி பெறாததே ஜனநாயகத்துக்கு நல்லதாகும். இதனால் சர்வாதிகார சக்தி பெறாமல், ஜனநாயகத்துக்குகந்த திட்டமான பலம் பெற்றும் புது ஈழ சர்க்கார் விளங்கும். இந்தியாவுடன் நல்லுறவுகளை வளர்க்கவும், ஆசியாவில் சுதந்திர சக்திகள் ஓங்கவும் சேனநாயகா சர்க்கார் வழி காணுமாக!

# என்ன சேதி?

**பாராட்டுகிறோம்**

சென்னை வர்த்தக சங்கம் (Madras Chamber of Commerce) இவ்வாண்டுத் தலைமைப் பதவிக்குத் தொழிலதிபர் திரு ஏ. எம். எம். முருகப்பச் செட்டியாரைத் தேர்ந்தெடுத்திருக்கின்றது. ஆங்கிலேயர்களுடைய வர்த்தக சங்கத் தலைமைக்கு ஆங்கிலேயரல்லாதார் ஒருவரைத் தேர்ந்தெடுப்பது இதுதான் முதல் தடவை. சுதந்திர சகாப்தத்துக்குப் பின் தொழில் துறை முழுதும் சோஷலிஸ பாணியின்கீழ் வருபடும்போது ஆங்கிலேய வர்த்தகர்களின் நலன்கள் என்றும் இந்திய வர்த்தகத் தொழிலதிபர்கள் நலன்கள் என்றும் பாகுபாட்டுக்கே இடம் இல்லை. இந்தப்பிரத்யக்ஷ நோக்கிலேயே சென்னை வர்த்தக சங்கம் செயலாற்றியிருக்கிறதோ என்று தோன்றுகிறது. தவிரவும் திரு முருகப்பச் செட்டியாரிடம் ஆங்கிலேய வர்த்தக சமூகம் வைத்துள்ள நம்பிக்கையும் மதிப்பும் இதிலிருந்து புலனாகிறது.

திரு ஏ. எம். எம். முருகப்பச் செட்டியார் ஏற்கனவே இந்திய வர்த்தக சம்மேளனத்தின் தலைவராகத் தொண்டு செய்திருப்பவர். அவருடைய தலைமையில் சீரும் செழிப்புமாக நாள்தோறும் விரிவடைந்து கொண்டே இயங்கும் டி. ஐ. சைக்கிள் கம்பெனி பர்மிங்ஹாமிலுள்ள டியூப் இன்வெஸ்ட்மெண்டுக் கம்பெனியின் ஒத்துழைப்புடன் இயங்கும் ஸ்தாபனம் என்பதை எண்ணிப் பார்த்தால் ஆங்கிலேயத் தொழிலதிபர்களுக்கும் திரு முருகப்பச் செட்டியாருக்குமுள்ள நெருங்கிய தொடர்பு தெரியும். சென்னை வர்த்தக சங்கத்துக்குத் தலைவராக இருக்க அவர் முற்றிலும் தகுதி பெற்றவர். அவருடைய தலைமையில் சென்னை வர்த்தக சங்கத்தின் சேவையும் முக்கியத்துவமும் அதிகரிக்குமென நம்புகிறோம்.



திரு முருகப்பச் செட்டியார்

**ராஷ்டிரபதி ஆட்சி**

ஈழ மக்கள் அதிருஷ்டசாலிகள்! கம்யூனிஸத்துக்கு எதிராக அங்கு ஒரு நல்ல கட்சி பெரும்பான்மை ஸ்தானங்களுக்குப் போட்டியிட்டதால் அவர்கள் ஆள்கிற கட்சியை உதறித் தள்ளி, போதிய பலமுள்ள எதிர்க்கட்சியை ஆட்சி பீடத்தில் அமர்த்த முடிந்தது. கேரள மக்கள் அவ்வளவு அதிருஷ்டம் செய்திருக்கவில்லை. தனிப்பட்ட அங்கத்தினர்களின் நேர்மையுடன் கூடிய அசல் கம்யூனிஸம், ஊழல் மலிந்த மறைமுக 'காங்கிரஸ்—கம்யூனிஸம்' இவற்றில் எதைத் தேர்ந்தெடுப்பது என்று குழம்பினார்கள். வேறு எந்தக் கட்சியும் சர்க்கார் அமைக்க முடியாது என்கிற சூழ்நிலையில் அசல் கம்யூனிஸத்தை ஆதரித்தார்கள். அதிருஷ்டவசமாக அந்த ஆதரவு சட்ட சபையில் பெரும்பான்மை பலத்தைப் பெற முடியவில்லை. காங்கிரஸ் சர்க்காரும் அமைய முடியாது. கம்யூனிஸ்ட் சர்க்காரும் ஸ்திரமாக இருக்க முடியாது என்ற நிலையில் ராஷ்டிரபதி ஆட்சியை நீடிப்பது தவிர வேறு வழியிருக்கவில்லை.

எவ்வளவோ பொருளும், மனித சக்தியும், காலமும் செலவாகிப் பொதுத் தேர்தல்கள் நடந்து, மீண்டும் இத்தகைய முடிவு ஏற்பட்டது வருத்தமாகத்தான் உள்ளது. ஆனால் இது தவிர்க்க முடியாத நிலவரம். அடுத்த பொதுத் தேர்தலுக்குள்ளாவது காங்கிரஸ், கம்யூனிஸம் இரண்டுமல்லாத சுதந்திரக் கொள்கைகள் கேரளத்தில் பரவி மக்களின் குழப்பத்தைத் தெளிவிக்க இறைவன் அருள் புரியட்டும்!

# வாஷிங்டனில் வண்ண ஓவியங்கள்

**வா**ஷிங்டன் நகரிலிருந்தபடியே இந்திய நாட்டின் இயற்கை வனப்பு மிக்க காட்சிகள் பலவற்றைத் தலைநகர்வாசிகள் கண்டு மகிழும் வாய்ப்பு அண்மையில் கிட்டியது. வண்ண வண்ணமான ஓவியங்களில் கன்யாகுமரியை, கேரளத்து நீர்வளத்தை, அழகே உருவான தாஜ்மகலை, சிற்ப சித்திரவளமுள்ள ஆலயத்தை யெல்லாம் கண்டோம். இந்திய கிராமிய வாழ்க்கையைச் சித்திரிக்கும் காட்சிகள் பலப் பல. ஆட்டிடையன், நெற்கதிர்களை அறுவடை செய்து கொண்டு போகும் விவசாய தம்பதிகள், நடனமாடும் தேவதாசி, இரை தேடிச் செல்லும் பட்சிஜாலங்கள், ஆற்றங்கரையோரத்தில் தவம் புரியும் அடிகள், கடலோரத்து மீனவர் — எல்லோரும் உயிர்பெற்றுக் கண் முன்னால் நடமாடுவதைப் போன்ற பிரமை ஏற்படத்தான் செய்தது.

ஆம், இங்கு தூதர் பி.கே. நேருவும், அவரது மனைவியும் வாஷிங்டன் கலைக்கூடத்தில் நடத்திய இந்திய ஓவியக் கலைக் கண்காட்சியினைச் சுற்றிப் பார்த்து வந்தபோதுதான் இந்த உணர்ச்சி ஏற்பட்டது. மெய்ம் மறந்து போய்விடும்படி செய்யவல்ல அற்புதப் படைப்புக்கள் இவை; இவற்றையெல்லாம் தீட்டிய பெருமை ஓர் இந்தியப் பெண்மணியைச் சேரும். அவர்தான் ஸ்ரீமதி பத்மாமாதவ் ராவ்; ஓவியத்தைத் தொழிலாகக் கொண்டிராத அவர், தொழில் கலைஞருக்கே உரிய கற்பனைத் திறனையும் கைவரிசையையும் காட்டி அபார வெற்றி கண்டிருக்கிறார். ராஜீய தூதர்கள் என்ன, கலாபிமானிகள் என்ன எல்லோரும் திரளாகக் கூடி அவருடைய ஆற்றலைப் போற்றினார்கள்; வெறுமனே பாராட்டோடு நிற்காது போட்டி யிட்டு அந்த ஓவியங்களை யெல்லாம் அமெரிக்கக் கலாரசிகர்கள் கிரயம் செய்துகொண்டு விட்டனர்.

**இ**ந்த அழகான காட்சியை அலங்கரித்த ஓவியங்களைத் தீட்டிய ஸ்ரீமதி பத்மா மாதவ் ராவ், ஆந்திரத்தில் பிறந்தவர். இளம் பிராயத்திலிருந்தே கலை ஆர்வம் மிகக் கொண்ட அவர், டில்லியிலே காட்சிக்கு



பல ஓவியங்களைத் தீட்டிப் புகழ் அடைந்தவர். அவருடைய கணவர் பி. மாதவ்ராவ் இங்கு தூதரகத்தில் ஒரு முக்கிய அதிகாரி; அவரும் நல்லதொரு ஓவியர். ஸ்ரீ ராவ், தென்னாட்டிலும் பம்பாய், டில்லியிலும் வேலை பார்த்த சமயம் ஸ்ரீமதி ராவ், விரிவாகச் சுற்றுப்பிரயாணம் செய்து இயற்கைக் காட்சிகளை ரசித்து வந்தவர். அவ்வப்போது தீட்டிய அரிய ஓவியங்கள்தாம் இங்கு தலைநகரில் காட்சிக்கு வைக்கப்பட்டன.

ஸ்ரீமதி பத்மா கைதேர்ந்த கலைஞர் மட்டுமல்ல; சிறந்த சமூக நலத் தொண்டருமாவார்; இந்திய நாட்டுப் பொம்மைகளைத் தருவித்தும், ஏன், தயாரித்தும் தர்ம காரியங்களுக்கு நிதி திரட்டுவதில் முன் நிற்பவர். இந்த ஓவிய விற்பனைத் தொகையில் ஒரு பகுதியைப் பார்வையற்ற மக்களின் சகாயத்துக்காகக் கொடுத்துவிடப் போகிறார். வாஷிங்டன் இந்திய மாதர் கழகமான 'சேதனா'வுக்கும் பெரும் பணி செய்து வருபவர். இந்தியப் பண்புக்கே உறைவிடமெனத் திகழும் ஸ்ரீமதி மாதவ் ராவின் இந்த ஓவியக் காட்சி வெற்றி என்பது இந்திய சமூகத்துக்கே பெருமிதம் தருவதாகும்.

— ஓ. என். நாகரத்தினம்

கண் காட்சியில் ஸ்ரீமதி பி. கே. நேரு, ஓர் அமெரிக்கருக்கு ஓவியங்களை விளக்குகிறார். கலைஞர் ஸ்ரீமதி பத்மாவும் இந்திய தூதர் நேருவும் அருகில் நிற்கின்றனர்.

—படம்: [illegible]

**கி. ராஜேந்திரன்** எழுதும்

# காலச் சக்கரம்

நேற்று

''பந்து விளையாட வேண்டுமா? வா, ஆடலாம்'' என்று அழைத்தான் சிறுவன் தங்கப்பன்.

''மாட்டேன்'' என்று கூறித் தலையசைத்தாள் உஷா.

''ஏன்?''

''ஏனென்றால் உன் அப்பா பல பேர் குடியைக் கெடுத்தவர். என் அப்பா ஜெயிலுக்குப் போகவும் உன் அப்பாதான் காரணமாயிருந்தார். அதனால் நான் உன்னுடன் விளையாட மாட்டேன்!'' என்றாள் குழந்தை உஷா.

இன்று

தலையிலும் உடம்பிலும் பட்ட பலத்த காயங்களுக்குக் கட்டுப் போட்டுப் படுக்க வைத்திருந்தார்கள் அவரை.

''மாருதி ஸார்! இதெல்லாம் என்ன?'' என்றலறினான் தங்கப்பன்.

''உனக்கு ஓட்டுப் போடச் சொல்லிக் கிராமம் கிராமமாய்ப் போய்க் கேட்டதற்குக் கிடைத்த பரிசு தம்பி, இது!'' என்றார் மாருதி.

''ஐயோ!'' என்று வேதனை தாங்காமல் துவண்டான் தங்கப்பன்.

''அடித்து நொறுக்கியதுடன் நிற்கவில்லை தம்பி! அடுத்தாற்போல் அடுக்கடுக்கான ரூபாய் நோட்டுகளையும் என் கரத்திலே அள்ளிச் சொரிந்தார்கள்!'' என்றார் மாருதி.

தன்னைக் குற்றவாளியாக்கிக் கொள்கிறான் ஒரு இளைஞன். சடலம் தன் தங்கையுடையதுதான் என்கிறாள் கொலையுண்டவளின் சகோதரி! ஆனால்... உண்மையில் கொலையுண்டவள் இறக்கவில்லை. அப்படியானால் அந்த..

# அவள் எங்கே?

**கௌசிகன்** எழுதும் சித்திரத் தொடர்கதை...

**11-4-65** புத்தாண்டிலிருந்து ஆரம்பமாகிறது.



## புதுமையான தொடர்கதை

நாளை...

"நாளை அதிகாலையில் தினதயாளு வின் உயிர் பறிக்கப்படும்; அதன் பிறகு பாரத நாட்டில் ராணுவ ஆட்சியும் உருவாகிவிடும்!" என்றாள் மிருநாளினி.

"இப்போதே தினதயாளுவுக்கு டெலிபோன் செய்து அவரை எச் சரித்து விடுகிறேன். தற்காப்புக்கும் நாட்டின் பாதுகாப்புக்கும் அவர் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வார்" என்று கூறிப் பாய்ந் தான் தங்கப்பன், இடைமறித்த மிரு நாளினியை இழுத்துத் தள்ளிவிட்டு.

விழுந்து புரண்டவள் எழுந்து நின்றாள். அவள் கரத்தில் இப் போது ஒரு துப்பாக்கி இருந்தது. "தங்கப்பன்!" என்றாள் அதட்டுகிற குரலில். துப்பாக்கி அவன் நெஞ்சைக் குறி பார்த்தது!



# கல்கி

ஏப்ரல் 11

## புத்தாண்டு மலரில் ஆரம்பம்

- க்யூ வரிசைக் கதைகள்
- இன்றைய நாகரிகம்
- சித்திரக் களஞ்சியம்

போன்ற பல புதிய அம்சங்களும் ஆரம்பமாகின்றன

புத்தாண்டு மலரின் சிறப்புக்கு

ஆர்வி, அரு. ராமநாதன், தி. ஜானகிராமன், பி. எஸ். ராமையா ஆகியோரின் அற்புதமான சிறு கதைகளும்

கோமதி சுப்பிரமணியம் எழுதிய

என்ற தரமான குறு நாவலும், கவிதைகளும், ஹாஸ்யங் களும் அணி செய்கின்றன.

ஒரு குடை நிழற் கனவு: ஓயாத சிந்தனையில் மாயாத பேரலைகள்.

தன்னிழலே பொன்னிழலாய்த் தாணி மக்கள் கருத எண்ணிக் கண்ணிமையில் கனவுகளைக் கூடு கட்டி நிறுத்திக் கற்பனையில் ஒப்பிலையாய்க் கவனமுடன் கூர்ந்து கவனித்தார், சமுத்திரமே தம் பெயராய்—தம் பெயரே சமுத்திரமாய்க் கொண்ட 'லிச்சாவி தௌஹித்திரன்' சமுத்திரகுப்த மகாசக்கரவர்த்தி.

அறிவாகிய வீணையின் ஆயிரமாயிரம் நரம்புகள் தெறித்தன! வீரச் சங்கினிலே ஒலி மிதக்கும்! நோக்குதல் வானமளாவியது: சிந்தனை ஆகாயமாக விரிந்தது!

'இதுவன்றோ உலகத்து ஒரு குடை!'—

நீலப் பந்தலைப் போல் எல்லையிலா நீள் வானம். வைரமணிப் பொட்டுக்கள் உலகத்து ஓயாத கதைகளை ஒளி நகை சிந்திப் பேசின. கன்னி நிலா சக்கரவர்த்தியின் கவனத்தைக் கவர்ந்தாள். அடுத்து அவருடைய கவனத்தைக் கவர்ந்தது அந்தக் கணையாழி. அதன் கதைதான் எத்துணை கலை மிக்கது! ஏன்? சோகம் மிக்கது!

''சக்கரவர்த்தி.....!''

எங்கிருந்து கேட்கிறது இந்தக் குரல்? குரலா அது? நுணுக்கமாகச் சுருதி சேர்க்கப்பட்ட தமிழகத்துச் செங்கோட்டியாழின் மதுரவொலியல்லவோ கேட்கிறது! சமுத்திரகுப்த மகாசக்கரவர்த்தி நினைவிழந்தவண்ணம் மீண்டும் வானத்தை அண்ணாந்து கவனித்தார். அங்கே தண்ணென்ற வெண்ணிலவு இல்லை; பெண்ணென்ற பொன்னுருவம் காட்சி தந்தது. சக்கரவர்த்தியின் திருவாய்: ''தேன்மொழி!'' என்று மலர்ந்தது. அப்படி மலர்ந்து இதழ் விரிக்கும்போதுதான் அந்த 'ழ'கரம் பட்ட பாட்டினைப் பார்க்க வேண்டுமே!

மீண்டும் அதே குரல்: ''சக்கரவர்த்தி!''

வெறும் மயக்கந்தான். ஆயினும் மகத மகாசக்கரவர்த்தி சமுத்திரகுப்தர்: ''தேன்மொழி'' என்று மறுமுறையும் அழைக்கத் தவறவில்லை. அவரா இப்போது அழைத்தார்? மனம்; மனமென்ற சாட்சிக்காரன். மனிதருடைய பழையனவும், புதியனவுமான நிகழ்ச்சிகளையும், சொற்பரிமாற்றங்களையும் மறந்து விடாமல் நினைவுபடுத்தும் மாய வித்தைக்காரனாயிற்றே அவன்!

''சொல், தேன்மொழி!''

''காதல் எப்போது வளர்கிறது?''

''காதலி கோழையாகாத வரையில்.....''

''அது செத்துப் போய் விடுகிறது என்றால்....?''

''காதலன் கோழையாகி விட்டான் என்றுதான் பொருள்!''

''என் காதலர் மாவீரர்; இல்லையா?''

ஆண் உள்ளத்தில் ஒரு தடுமாற்றம்: ஆயினும் ஒரு தேற்றம். அதனூடே எழுந்த மறுமொழி: ''சாதாரண மாவீரனல்ல, தேன்மொழி! உலகத்தையே தன்னுடைய ஒரு குடை நிழலில் கொண்டு வர நனவு காணும் ஒரு சக்கரவர்த்திக்கு இருக்க வேண்டிய வல்லமை பொருந்திய மாவீரம் எனக்கும் இருக்கிறது!''

''அப்படியென்றால் என்னுடைய காதலை நெஞ்சோடும், இதய நிறைவோடும் வாழ்த்திக் கொள்ளுகிறேன்....!''

கனவு கரைகிறது: நினைவு மலர்கிறது. சொன்ன சொற்களை எண்ணிப் பார்க்கிறார் மாவீர சமுத்திரகுப்தர். தம்மைத் தாமே கேட்டுக் கொள்ளுகிறார்: 'நான் மாவீரன்தானா?'

மீண்டும் கனவு மலர்கிறது: நிலவு மறைகிறது.

''பிரபோ! நான் தமிழகத்து மங்கை. காதலுக்குக் காவியம் கண்ட மண்ணில் உதயமானவள்; கற்புக்குப் பேரிலக்கியம் கண்ட மொழிப் பூமியில் பிறந்தவள்; 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற பண்பிலக்கணம் பேசும் வாய்கள் என்னைப் பெற்றெடுத்தன. என்னைக் கைவிட்டுவிட மாட்டீர்களே!''

''சத்தியமாகக் கைவிட மாட்டேன். இதோ அதன் சாட்சியாக என் கணையாழி!''

''அப்படியென்றால் என்னுடைய இந்தக் கணையாழியை நீங்கள் அணிந்து கொள்ளுங்கள். என்னுடைய இனிய நினைவை இது எப்போதும் தங்களுக்கு நினைவுபடுத்திக்கொண்டேயிருக்கும்!''

கூ..... குக்கூ......

''அந்தக் குயிலின் இசையைக் கேட்டீர்களா?''

''கணையாழி மட்டுமல்ல; எங்கெல்லாம் குயில்கள் கூவுகின்றனவோ, அங்கெல்லாம் அவற்றின் குரல்



கனைத் தோல்வியுறச் செய்ய வல்ல தேன்மொழியின் நாதக் குரலும் நினைவுக்கு வரும் என்பதை அந்த ஒற்றைக் குயில் நினைவூட்டுகிறது கண்ணே!''

''நானே தாங்கள் வடக்கு நோக்கிப் புறப்படப் போகிறீர்கள் அல்லவா?''

''புறப்பட்டே ஆக வேண்டும்!''

''மகிழ்ச்சியோடு சென்று வாருங்கள். தயவுசெய்து இந்த இரவிலேனும் உண்மையைச் சொல்லுங்கள். தாங்கள் ஒரு பிரபுக் குமாரர்தானா?''

''..............................''

''உண்மையைத் தவிர வேறெதையும் கண்டறியாதவள் கேட்கிறேன். உண்மையைச் சொல்லுங்கள்!''

''உம்...உண்மையைத் தவிர... உண்மைதானா தேன்மொழி?''

''என்ன அலட்சியமான குரல் இது? தமிழகத்துப் பெரும்பாலான நாவுகள் உண்மை என்ற ஒரே இசையை முழக்கும் தந்தியற்ற பேரியாழ்.''

''அங்கே 'நெடுபாலான' என்ற ஒன்றும் தொக்கி நிற்கிறதல்லவா?''

''நிற்கிறது; மறுக்கவுமில்லை. அவை வெளிநாட்டவரின் இறக்குமதிகளை விலை பேசி நிலைகுலைந்து வாழ்பவை!''

கடகட வென்ற சிரிப்பொலி.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''உன்னுடைய நாயகத்துப் பற்று என்னைச் சிரிக்கச் செய்கிறது!''

''சிரித்த தாங்களே பிறகு சிந்திக்கவும் செய்வீர்கள்! நீங்கள் யார் பிரபோ?''

''தேன்மொழி! இது பரம ரகசியம். மனத்தோடு பூட்டி வை. உன்னை நம்பிச் சொல்லுகிறேன். நான் மகத சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி சந்திரகுப்த மகாராஜாதிராஜரின் இளம் புதல்வன். நாளைய மகத மகா சக்கரவர்த்தி!''

கண்ணிமைகள் சிட்டாகப் படபடக்கின்றன; கரு விழிகள் மானாக மருளுகின்றன.

கனவு மறைகிறது; நிலவு தோன்றுகிறது. அதே படபடப்பு. அதே மருட்சி; சக்கரவர்த்திக்கும்.

மயக்கத்திலிருந்து விடுபட்ட மகாசக்கரவர்த்தி சமுத்திரகுப்தர், மனத்தைப் பிசைந்து கொண்டார். யாரோ அரசன்? யாரோ வீரன்? இல்லை.... இல்லை....

பின்......?

குப்த மாதேவி குரல் கொடுத்தாள். சிந்தனை கலைந்தது. அலைகள் ஓய்ந்தன. அமைதி. அதற்கடுத்து தேவியின் அழைப்பு. அன்றிரவு அவர்களுக்குத் தேவையான இரவு. பொழுது விடிந்தால் போர்ப் பயணமாயிற்றே!

கி.பி. நான்காம் நூற்றாண்டின் நடுப் பகுதியைத் தாண்டிய காலம் அது.

மகதப் பேரரசைக் கட்டி யாண்டவர்களுள், மலையெனப் புகழை நிறுவி, நிலையென வாழ்வை யமைத்து, நிலையெனச் செங்கோ



# கணையாழி

கோவி. மணிசேகரன்

லோச்சி வந்த மகாசக்கரவர்த்தி சமுத்திர குப்தர், வாழ்வில் கலைஞரேயொழியப் போரில் வெறியர். போர் என்பதே அந்நாளில் போற்றத்தக்க நாகரிகம்; புனிதம் நிறைந்த செயலாயிற்றே! போர் மறுத்தார்; யார்மதித்தார்?

தந்தையார் சந்திரகுப்தருடைய வரவாறே வாள் முனையில் எழுதியதுதானே? ஓர் எளிமையான கோவல மரபைச் சார்ந்த சந்திரகுப்தர், லிச்சாவியரின் மகளான குமாரதேவியை மணந்ததன் காரணமாக மகதத்தைக் கைப்பற்ற முடிந்தது. அதன் பின்னர் நாவலந்தீவையே ஆட்கொள்ள நினைத்தார். அதற்கேற்ப மகனும் வீரப் புதல்வனாக விளங்க நேரிட்டது. எனவே, இளம் வயதில் வீர சாகஸ அனுபவம் கிடைக்கட்டும் என்ற துணிவான நினைவுடன், சமுத்திரகுப்தரை நாடு நாடாகப் பயணம் செய்து திரும்பும்படி ஆணையிட்டார். இது இளமைத் துடிப்பு நிறைந்த சமுத்திரகுப்தருக்குத் தித்திக்கச் செய்தது. பிற்பகல் போர்ப் பயணத்துக்கு இந்தச் சுற்றுலா பயன்மிக்கதாக அமையும் என்று எண்ணிச் சமுத்திரகுப்தர் சில தலைவர்களுடன் யாத்திரிகளுகக் கிளம்பினார். அப்படிச் சுற்றுப் பயணம் செய்து, தமிழகத்தை அடைந்தார். கல்வியில் கரையிலாக் காஞ்சிமாநகரம் அவருடைய கவனத்தைக் கவர்ந்தது. அத்துடன் காதலையும் கவர்ந்தாள் தேன்மொழி. ஒரு பிறைகாலம் காஞ்சியில் தங்கி ஏற்பட்ட காதலும், கணையாழியும் மகதம் திரும்பியதும் மறந்தே போயின. காரணம் மகத சக்கரவர்த்தி சந்திரகுப்தர் மரணப் படுக்கையில் கிடந்தார். மணிமுடி தலையிலும், செங்கோல் கரத்திலும் உடனடியாக இடம் பெற நேர்ந்து விட்டது. எந்தவிதமான ஆலோசனைக்கும், அவகாசத்துக்கும் இடமில்லாமல் திருமணம் முடிந்தது. தந்தையார் மறைந்தார். ஆட்சிப் பொறுப்பும், அண்டைப் பகைவர்களை அடக்கும் நினைப்பும் ஆண்டுகளை விழுங்கத் தொடங்கின; நினைவுகளை அலறச் செய்தன; இளமை மாறியது; முதுமையும் ஏறிக் கொண்டேயிருந்தது.

ஒரு வழியாக மகத எல்லைகள் நிறைவாக விரிந்தன.

குப்தமாதேவியும் கருவுற்று, குழவியீன்று, அதற்குப் பாட்டனாரின் பெயரைச் சூட்டி, இப்போது கல்வி, கலை, வீரம் பயிலும் நிலைமைக்கும் ஆளாக்கிக் கொண்டிருந்தாள். இந்தத் தருணத்தில்தான் வாகாடகர்களும், நாகர்களும் வகையாகத் தொல்லை கொடுக்கத் தொடங்கினர். எனவே, அவர்களை அடக்கி, அப்படியே தென்னாடு வரை போர்ப் பயணம் நடத்தித் தம் நனவை அரங்கேற்ற நாளும் குறிப்பிட்டு விட்டார். அந்த நாள் —

**வி**டிந்தது. விழாக் கோலம் பூண்டது பாடலிபுத்திரம். தலைநகர்வாழ் மக்களெல்லாம் தவமிருந்து பெற்ற மகாசக்கரவர்த்தியை வாழ்த்தி வழிகூட்டக் குழுமியிருந்தனர். பாதையோரங்களில் நீளக் கயிறு கட்டியிருந்தது. அந்தக் கயிற்றெல்லைக்குள் தான் மக்கள் நின்று வேடிக்கை பார்க்க வேண்டும். தவறிக் கயிற்றைத் தாண்டி விட்டாலோ, கிடைப்பது மரண தண்டனை. இது அக்கால வழக்கு.

போர்ப் பயணம் தொடங்கிற்று. மகத மக்கள் கைகொட்டி ஆர்ப்பரித்தனர். கடல் போன்ற மக்களையும், சேனைகளையும் கண்ட மகாசக்கரவர்த்தி சமுத்திரகுப்தரின் மடல் விரித்த இதயத்தில் அடலழிக்கும் யானைவெறி போர்ப் பிளிறல் செய்தது.

பயணம் நீண்டது. வழி நெடுகக்கணையாழியும் கண்ணுமாகவும், கவனமும் போர்க்களமுமாகவும் அம்பாரியில் வீற்றிருந்தார் மகாசக்கரவர்த்தி. அணித்தே வந்த யானையின் மீது அவைக் கவிஞர் அரிசேனர் ஏடும் எழுத்தாணியுமாகக் காட்சி தந்தார்.

முதற்களம் நாகர்ப் போர்க்களமாக இருந்தது.

''சமுத்திரகுப்தா! வெற்றி! முதல் வெற்றி! கணபதிநாகன் கண் மூடினன்; நாகசேனன் நசிந்து போனன்; அச்சுதன் அழிந்துபட்டான். வாகாடகனை வானுலகுக்கு வழியனுப்பப் பயணம் தொடரட்டும்!'' என்று எக்காளமுடன் முழக்கம் செய்தார் கவிஞர் அரிசேனர். அவருடைய முழக்கம் வீண் போகவில்லை. வாகாட மன்னன் பிருதிசேனன் தோல்வி கண்டான். அவன் மட்டுமா? மத்தியப் பகுதியை ஆண்டு வந்த மகேந்திரனும், காண்டாவனத்தரசன் வியாக்கிரராஜனும் சரணுகதியே அடைந்தனர். கடைசியாகப் படைப் பயணம் தமிழகத்தை நோக்கியது.

'**ந**கரேஷு காஞ்சி' என்று மகாகவி பாரவியால் புகழப்பட்ட காஞ்சியை நோக்கிக் குப்தப் படைகள் வருகின்றன என்ற செய்தி காட்டுத் தீயைப் போல் நாலு திசைகளிலும் பரவியது. பல்லவ வேந்தன் விஷ்ணுகோபன் ஒருகணம் பதறிப் போய் விட்டான். ஏனைய சேர சோழ பாண்டியர்களை உதவிக்காக அழைத்தான். சேரன் விலகி விட்டான்.

மகத மகாசக்கரவர்த்தி சமுத்திரகுப்தர் போர் வெறி கொண்டு வடக்கு நாடுகளை வீழ்த்தி, முடிவாகத் தமிழகம் நோக்கி வருகிருர் என்ற செய்தியறிந்தது முதல், ஆத்திரமும் ஆவேசமுமாக அலைமோதிக் கொண்டிருந்தாள் தேன்மொழி! அவரை எப்படியும் சந்திக்க வேண்டும்; வீரத்துக்கும் கோழைக்குமுள்ள வித்தியாசத்தை அறிய வேண்டுமென்று பற்களைக் கடித்தாள்; இதயம் துடித்தாள்; கண்ணீர் வடித்தாள்.

கனல் கக்கும் கண்களுடன் காத்திருந்த தமிழ்ப் படைகளுடன், தினவெடுத்து ஓடி வரும் குப்தப் படைகள் கொல்லேறு ஏரிக் கரையில் கலந்தன. போரொலி பேரொலியாய் வானையும், வையத்தையும் அதிரச் செய்தது. வெற்றி யாருக்கு? தோல்வி யாருக்கு? — என்று சொல்ல முடியாத அளவில் அன்றையப் போரும் ஓய்ந்தது. மஞ்சள் பூசிய மாலைக் கதிரவன் கொஞ்சு மொழி பேசும் கூடத்தின் போர் கண்டு அஞ்சினன்; குடதிசையில் அயர்ந்தான்.

முணு முணுக்கு இரகசியம் போல் மினுமினுத்தன துகின்மணிகளில் ஏற்றி வைத்த

குப்த விளக்குகள். வண்ணத்துகில் மனையில் எண்ணச் சுழற்சி கண்டு வாடிய முகத்துடன் படுத்திருந்தார் குப்த மகா சக்கரவர்த்தி.— திரும்பிய திசைதோறும் தேன்மொழியின் திருமுகம்தான். அவளுடைய பசுமை நிறைந்த வண்ண நினைவுகள் இதயத்தை அலைக்கழிக்கச் செய்தன; உடலை நெருப்பாகக் கொதிக்கச் செய்தது. வந்து சென்ற கவிஞருடனும்கூட அவர் வார்த்தையாடச் சம்மதிக்கவில்லை. போர் வெறியோடு உடல் வெறியும் — உள்ளத்து வெறியும் கலந்து கொண்டன போலும்!

தேன்மொழியை நினைக்க நினைக்கத் தேகம் முழுதும் தகிப்பு கண்டது. அவள் இருக்கிறாளோ, செத்தாளோ? எவனுடனாவது வாழ்ந்தாளோ, தொலைந்தாளோ? இப்போது அவளுடைய நினைவே கூடாத ஒன்று. இறங்கி யிருக்கும் போர்ச் செயல் புறமுதுகு காட்டி விடக் கூடாதே! இந்த நேரத்தில் தேன்மொழியின் சிந்தனை வந்ததுமல்லாமல், தேகத்தில் ஒரு தணலெழுச்சி; ஒரு தாகத் தவிப்பு; ஒரு போதைக் கிறக்கம் ஏற்படுவானேன்?

''யாரங்கே?''

பணியாளன் வந்து பணிந்து நின்றான்.

''நமது சேரநாட்டுப் பிரதிநிதியை நான் அழைத்ததாகச் சொல்!''

பணியாளன் சென்றான். சற்றைக்கெல்லாம் சேரப் பிரதிநிதியாகவும், போர் வழிகாட்டியாகவும் சேர மன்னன் அனுப்பி வைத்த சற்குண சங்கரன் உள்ளே நுழைந்து தலை தாழ்த்திப் பணிந்தான்.

கழுத்திலிருந்த வைரமணி மாலையைக் கழற்றி எறிந்த குப்த மகாசக்கரவர்த்தி மொழிந்தார்: ''சற்குண சங்கரன்! இரவு எனக்கு அமைதியைத் தரவில்லை. தமிழர்களை வெல்வதற்கு எனக்குப் பரிபூரண அமைதி தேவை. உன் ஆட்களை ஏவி, நல்லதொரு விலைமகளை இங்கு அழைத்துவர ஆணையிடு!''

சற்குண சங்கரன் விழித்தான்.

''ஏன் தயக்கம்?''

''புத்தர்சேரிப் பகுதியைத் தள்ளித்தான் விலைமகள் வாழும் பகுதி இருக்கிறது. அங்கு போய்த் திரும்புவது என்பது.....''

குப்தமகாசக்கரவர்த்தி புலியாக உறுமினார்:

''மறுத்துப் பேச இது நேரமில்லை. நீ எங்கு செல்வாயோ, எனக்குத் தெரியாது. சக்கரவர்த்தி நான். எனக்குத் தகுதியான ஒரு பெண் — அதுவும் தமிழ்ப் பெண்ணுகத் தேவை. வஞ்சம் தீர வேண்டும்; நெஞ்சில் அப்போதுதான் போர்த் திட்டம் நிழலாடும். செல்; நிற்காதே! காலதாமதமாகவும் வராதே!''

மேற்கொண்டு எதையும் பேச முடியாத சற்குண சங்கரன், குழம்பிய மனத்துடன் அவ்விடத்தை விட்டு நகர்ந்தான்.

தங்கக் குவளையில் மதுவை நிரப்பி நிரப்பித் தாகசாந்தி செய்து கொண்டிருந்தார் சமுத்திரகுப்த சக்கரவர்த்தி. சற்றே தொலைவில் கொல்லேறு ஏரி சலனமற்றுக் காட்சி தந்தது. வானத்திலே அதே வைர மணிப்பொட்டுக்கள்; வலம் வந்த கன்னி நிலா!

**தகப்பனுர்: அடா...டா...டா! பாட புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தவுடனேயா உனக்குக் கொட்டாவி வரணும்?**

**மகன்: அது பாட புத்தகம் இல்லையப்பா; பத்திரிகையில் பிரசுரமான உங்க தொடர் கதையைத்தான் படிக்க ஆரம்பித்தேன்!**

---

உடலின் வெப்பத்தைத் தணிக்கவல்ல ஒண்டொடி ஒருத்தி, பொற்கொடியாய் அசைந்து வர, போதைக் கண்ணுடன் கவனித்துக் கொண்டிருந்தார் மகாசக்கரவர்த்தி. போர்ப் பயணங்களில் சக்கரவர்த்திகளுக்கு இப்படியான போதை தரும் விளையாட்டுக்கள் சர்வ சாதாரணம். வடதேசத்து மன்னர்கள் விலை மாதர்களை உடன் அழைத்துச் சென்றதையும், தமிழ் தேச மன்னர்கள் மனைவிமார்களைக் கொண்டு சென்றதையும் வரலாறு வாய் கூசாமல் செப்புகிறதே!

சற்றைக்கெல்லாம் சற்குணன் உள்ளே நுழைந்தான்.

''சக்கரவர்த்திகள் ஆணையை நிறைவேற்றி விட்டேன்!''

''அப்படியா? மகிழ்ச்சி. நீ போகலாம்; அவளை வரவிடு!''

ஜல் .... ஜல் .... ஜல் .... ஜல் .....

பாதச் சிலம்பு பலவிசை பாடியது. அந்த இசை எப்போதோ கேட்டுப் பழகியது போலிருந்தது மகா சக்கரவர்த்திக்கு! சில்லென்ற காற்றின் வருகை!

நீடு துயில் நீங்கிப் பாடிவரும் வெண்ணிலவு முகில் திரையைக் கிழித்துக் கொண்டு முகம் காட்டுவது போல, துகின்மனையின் திரைச் சீலையை விலக்கிக் கொண்டு துள்ளி வரும் புள்ளி மானென்ன உள்ளே நுழைந்த அந்தப் பெண்ணணங்கு கொள்ளை அழகை அள்ளிச் சொரிந்தாள். அவளைக் கண்ட சமுத்திர குப்தர் திகைப்புக் கடலில் மூழ்கினார்.

போதைக் கிறக்கம் புதையுண்டு போக எழுந்தார்; விளக்கின் திரியை மேலும் ஏற்றினார்; ஒளியின் வேகம் மேலும் பரவியது.

ஆர்த்த மதி சோர்ந்துபட, கனன்ற கண்கள் மருண்டு காண, ''தேன்மொழி!'' என்று அழைத்தார். சொல்லில் தடுமாற்றம்.

''ஆமாம்; தேன்மொழிதான்!'' அவள் அதற்கு மேல் எந்தவிதமான மறுமொழியையும் கூறவில்லை.

எதிர்பாராத இந்தச் சந்திப்பு சக்கரவர்த்தி சமுத்திரகுப்தரை எண்ணக் கடலில் மூழ்கடித்து. மூச்சுத் திணறலுடன் கூடிய திக்குமுக்காடலை உண்டுபண்ணி விட்டது. தேன்மொழி இன்னும் உயிருடன் இருக்கிறாளா? அதுவும் இந்த நிலையிலா இருக்க வேண்டும்? கடவுளே....! விலைமகளாய் விலைக்குட்பட்டு விரயத்தைத் தேடியலையும் வீணுருவாக வல்லவோ வந்து நிற்கிறாள்? இவள் பேசிய காதல் காவியம் என்ன? கற்பிலக்கணம் என்ன? வீர காதை என்ன? அத்தனையும் பொடிந்து துகள் துகளாய்ப் போய் விட்டனவா ? ஐயகோ ! என் கண்களை என்னால் நம்ப முடியவில்லையே ! எனக்காக வாழா விட்டால் போகிறது ! இன்னொருவனுக்காக-ஒருவனுக்கு ஒருத்தியாகவாவது வாழ்ந்திருக்கலாமே! நான் மறந்து வாழ்ந்து விட்டேன்; இவள் துறந்து— கற்பைத் துறந்தா வாழ வேண்டும்? இதுவா, தமிழகத்துப் பண்பு? சீ, சீ ! கேவலம் ! கேவலம் !

கனன்ற உடலிலே தண்ணிய குளுமை ! எதிர்பார்த்த பெண்ணுசையில் புதிர் விளைப்பிய கேள்விக்குறி! ஆசை தாளுகத் தணிந்தது; தலை நாணலாகக் குனிந்தது. அதற்குமேலும் சக்கரவர்த்தியால் பொறுமையாய் இருக்க முடியவில்லை. பெண்ணும் வேண்டாம்; மண்ணும் வேண்டாம். இந்த நிலையில் — எந்தப் பெண்ணைத் தெய்வமகளாக இதயத்தில் நிறுத்திப் பூசனைக்குரியவளாக நினைத்து வந்தோமோ அவளே பலிபீடத்துக்குரியவளாக எதிரே வந்து நிற்கும் நிலையில் —ஓர் இன்ப வெறியா? சே, போ !

விரலிலே காதல் விளக்கம் பேசிக் கொண்டிருந்த கணையாழியை நோக்கினார். அது பேசிய கதைகள்தாம் எத்தனை! எத்தனை ! கணையாழியைக் கழற்றினார். ''நான் எதிர்பார்க்க வில்லை!''

''நானும்தான் எதிர்பார்க்கவில்லை!''

''அதாவது... சக்கரவர்த்தியே கிடைப்பாரென்று ?''

''ம்... சக்கரவர்த்தி பெண் லோலனாக இருப்பார் என்று!''

எண்ணம் கூசியது; இதயம் குறுகியது. சீற்றத்துடன் சக்கரவர்த்தி சொன்னார்: ''உன்னிடம் அதிகமாகப் பேச நான் விரும்பவில்லை. இதோ, உன்னிடமிருந்து பெற்ற அவமானச் சின்னம் !''

கணையாழியைக் கழற்றி வீசியெறிந்தார். ''எடுத்துக் கொண்டு சென்று விடு!''

சக்கரவர்த்தி சந்திரகுப்தரின் இந்த அலட்சியம், தேன்மொழியைச் சந்நதக்காரியாக மாற்றி விட்டது. ''இதைப் பெற்றுச் செல்லத்தான் வந்தேன்; இந்த உடலை விலைபேச வரவில்லை. மகத மகாசக்கரவர்த்திகளே ! நான் விலைமகள் என்று தாங்கள் கருதுவீர்களேயானால் அது உங்கள் குற்றம். ஒரு தமிழ் மகள் எப்படி வாழ்வாளோ அப்படித்தான் இன்றுவரை வாழ்ந்து வருகிறேன். மாவீரச் சக்கரவர்த்திக் காதலர் வருவார், வருவார் என்று யுக யுகாந்திரமாகவும் காத்திருந்து நோன்பு நோக்க முடிவு செய்த வாழ்க்கை என் சோக வாழ்க்கை!''... தேன்மொழியின் கண்கள் கலங்கி விட்டன. விம்மிய மார்பகமும், கேவிய குரலுமாக மீண்டும் பேச்சைத் தொடர்ந்தாள்:—''கங்கைதான் தூயது; அதன் கரையில் வாழ்பவர்களெல்லாம் தூயவர்களாக இருக்க முடியாது என்பதை நிரூபித்து விட்டீர்கள். போர் வெறி கொண்டு தாங்கள் வரும் வருகையைக் கேள்விப்பட்டு எதிர்பார்த்தேன். சக்கரவர்த்திகளே! இந்த உடல் இன்றளவுக்கும் மாசுபடவில்லை. நாளை அது தீயில் பட்டுவிடும். அதற்கு முன்.... அதற்கு முன்... தங்களைச் சந்திக்க முயன்றேன். அதன் பயனுகத் தாங்கள் போர் வெறியுடன் பெண் வெறியும் கொண்டு தமிழ் மகள் ஒருத்தியைப் பலி கேட்டு அனுப்பிய ஆளை விதி வசமாகச் சந்திக்க நேர்ந்தது. என் காதலர் — நாவலந்தீவின் மகாசக்கரவர்த்தியின் உடலில் விலைமகளின் களங்க ரத்தம் கலக்கக் கூடாதே என்ற நற்பண்புடன் நானே வந்தேன். இது தவறு ? தங்களைக் காதலித்ததற்காக இதைவிட ஒரு பெரிய தியாகம் என்னல் செய்துவிட முடியாது. ஆனல், தாங்களோ, பண்பிலா முறையில் கணையாழியைக் கழற்றி எறிந்தீர்கள். உண்மைதான். மாக படிந்த — சொன்ன சொல் தவறிய — ஏன்? தங்கள் வாக்குப்படி கோழையான தங்கள் விரலிலே அது இடம் பெற்றிருக்கத் துளியும் அருகதையில்லை ! நான் போகிறேன்!''

அவள் திரும்பினுள், புனலாகிய விழிகளைத் துடைத்தவண்ணம் !

''நில்.....!''

முகத்தை மட்டும் திருப்பினுள்.

''என்னுடைய கணையாழி எங்கே?''

''இந்த என் முயற்சிக்குத் துணை புரிந்த ஒரு கேவலமானவனுக்குப் பரிசாகத் தந்து விட்டேன். அதற்குரிய முடிவு அதுதான்!''— மேலும் அங்கே நிற்க விரும்பாத தேன்மொழி மயான நினைவு கொண்டவளைப் போல் நெடும் பயணம் செய்து கொண்டிருந்தாள்.

மலமென்ற அந்தச் சாட்டைக்காரன் கன்னங்களில் 'பளார், பளார்' என்று வலிமை கொண்டு அறைவது போலத் தெரிந்தது சக்கரவர்த்திக்கு. அவர் மயங்கிக் கூனிக் குறுகி அப்படியே அயர்ந்து விட்டார். கண்களிலே நீர் கரை புரண்டது. தெளிவற்றிருந்த இதயக் கோயிலில் யாரோ — யாரோ என்ன, தேன்மொழி அகல்விளக்கொன்றை ஏற்றி, ஏந்தி வருவதாகத் தெரிந்தது.

பொல்லென்று விடிந்தது பொழுது.

அங்கே —

போருக்கென இறக்கப்பட்ட தண்டோ, தடையமோ எதையும் காணும். ஒரே மயான பூமிபோலக் காணப்பட்டது.

கொல்லென்று சிரித்தது; அலேக்காரம் தட்டியது; கொல்லேறு ஏரி !

# நாகாலாந்தில் நடப்பது என்ன?

இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் கடைசி கடைசியாகப் பர்மிய எல்லைப்புறத்தில் 'நாகாலாந்து' என்ற ராஜ்யம் இருக்கிறது. நமது பழைய காலக் கதைகளில் சுயம்வரக் கட்டத்தில் பிரஸ்தாபிக்கப்படும் 'அங்க, வங்க, கலிங்க, காம்போஜ...' என்ற ஐம்பத்தாறு தேசங்களின் ஜாபிதாவில் இது இடம் பெற்றிருக்கவில்லை. ஏன், டெக்ஸ்ட்புக் கமிட்டியார் அங்கீகரித்துள்ள பூகோளப் புத்தகங்களிலும் இப்பெயர் தலைகாட்டவில்லை.

காரணம், இந்த ராஜ்யம் புதிதாகப் பிறந்ததாகும். அதன் வயது இந்த வருடப் பிறப்புக்குச் சரியாக ஒரு வருஷம் நாலு மாதம் 13 நாளாகிறது. அது பிறந்தது 1–12–1963ந் தேதியன்று.

மேற்கே அஸ்ஸாமினாலும், வடக்கே அஸ்ஸாமினாலும் நேபா பிரதேசத்தினாலும், கிழக்கே பர்மாவினாலும், தெற்கே மணிபுரி ராஜ்யத்தினாலும் சூழப்பட்டுள்ள நாகாலாந்து இந்தியாவிலேயே மிக மிகச் சிறிய ராஜ்யமாகும். இது ஒரு ஜில்லாவைப் போன்றதாய்ச் சுமார் 6,000 சதுர மைல் விஸ்தீரணமே உள்ளது. ஜனத்தொகையோ ஐந்தரை லட்சம்தான்.

மலைப்பிரதேசமான நாகாலாந்து, காடுகள் செறிந்ததாய்ப் பார்க்கப் பசுமையாய்த் தோன்றும். ஆனால் உணவு தானியப் பயிர்கள் சாகுபடி செய்யப் பெரும்பாலும் லாயக்கற்றது.

ராஜ்யத்தின் வருமானம், வீட்டு வரிகளிலிருந்து அரை லட்சம் ரூபாயும் காட்டுப் பொருள்கள் விற்பனையிலிருந்து நாலரை லட்சம் ரூபாயும் ஆக மொத்தம் ஐந்து லட்சம் ரூபாய்தான். ஒரு நல்ல பங்களாவின் விலை, ஒரு பெரிய சினிமா நட்சத்திரம் இரண்டு படங்களில் நடிக்க வாங்கும் தொகைக்கும் குறைத்துத்தான் இந்த ராஜ்யத்தின் வருடாந்தர வருமானம்!

**துமிலன்**

இப்படியாக, நாட்டின் பரப்பு, ஜனத்தொகை, வருமானம் ஆகியவை 'தனிப்பட்ட ஒரு ராஜ்யம் ஏற்படுத்துவதைப் பற்றிக் கனவிலும் எண்ணிப் பார்க்கக் கூடாத முறையில் அமைந்திருக்கின்றன.

ஆயினும் நாகாலாந்து ராஜ்யம் என்று ஒன்று உண்மையில் இருக்கத்தான் செய்கிறது. (அதற்கு மந்திரி சபை வேறே, முதன் மந்திரி வேறே!) அது இந்தியாவின் பதினாறுவது ராஜ்யமாகும்!



நாகாலாந்து பகுதியில் இருப்பவர்களைப் பொதுவாக நாகர்கள் என்கிறோம். 'நாக' என்ற வார்த்தை வந்தால் அது அநேகமாக நாகப் பாம்புடன் ஏதாவது ஒரு விதத்தில் சம்பந்தப்பட்டதாக இருக்கும். நாகாலாந்துக்குத் தெற்கில் உள்ள மணிப்புரி ராஜ்யம் தோன்றியதற்கு நாகப் பாம்பின் மணியைச் சம்பந்தப்படுத்தி ஒரு கதை சொல்கிறார்கள். அது போன்ற கதை எதுவும் நாகர்கள் விஷயத்தில் கிடையாது.

நாகர்கள் மலைஜாதியினர். அவர்கள் மலைப் பிரதேசத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதியில் சேர்ந்தாற்போல் வசிக்கவில்லை. குன்றுகள்மீது கிராமங்களை அமைத்துக் கொண்டிருக்கின்றனர். இரண்டு கிராமங்கள் அருகருகே இருப்பதில்லை.

இத்தகைய குன்றுக் கிராமங்களில் சுமார் 800 வீடுகள் இருக்கின்றன. பலவற்றில் ஆயிரம் வீடுகள் வரை இருக்கும். வீடுகள் பாறைக் கற்களாலும், மரம், மூங்கில் முதலியவற்றாலும் கட்டப்படுகின்றன.

நாகர்கள் வர்ண ஆடைப் பிரியர்கள்; அவர்கள் உடைகளில் கறுப்பு, சிவப்பு, நீலம் ஆகிய மூன்று வர்ணங்களும் கட்டாயம் இருக்கும். அநேகமாக மஞ்சள் நிறத்தை உபயோகிப்பதில்லை.

ஆண்கள் கைகளில் யானை தந்தத்தாலான வளையங்களை அணிந்து கொள்வார்கள். பலசாலியான வாலிபர்கள் தங்கள் முழங்கால்களில், பிரம்பாலான பல வளையங்களை மாட்டிக் கொண்டிருப்பார்கள். அநேகமாக எல்லாருக்கும் தலையில் குல்லா



பிருக்கும். அதில் ஏதாவது இறகுகள் செருகப்பட்டிருக்கும்.

நாகர்கள் நன்றாக உழைப்பவர்கள். கட்டுப்பாட்டுக்கு உட்படக் கூடியவர்கள். நல்ல பலசாலிகள்; தீரர்கள். உயிரை லட்சியம் செய்யாதவர்கள். பழிக்குப் பழி வாங்கும் சுபாவம் உள்ளவர்களாய், அது விஷயத்தில் ஈவிரக்கமின்றி மிகவும் குரூரமாய் நடந்து கொள்பவர்கள்.

ஒரு வகுப்புக்கும் மற்றொரு வகுப்புக்கும் சண்டை நடக்கும்போது பல தலைகள் உருளும். கொல்லப்பட்டவர்களின் தலைகளைச் சிலி எடுத்துக் கொண்டு வந்து தங்கள் கிராமத்தின் வீதிகளில் வெற்றிச் சின்னமாய் அவற்றைக் கம்பங்களில் குத்தி வைப்பார்கள். சில சமயம் நூற்றுக்கணக்கான தலைகள் இப்படிக் காட்சியளிக்குமாம். 'ஆயிரம் தலைவாங்கிய அபூர்வ சிந்தாமணி' ஒரு நாகர்ப் பெண்மணி போலும்!

நாகர்களுக்கு உணவுத் தான்யங்களும் மற்ற வாழ்க்கை வசதிப் பொருள்களும் தேவைப்படும்போது அடிக்கடி கீழிறங்கி வந்து பிரம்மபுத்ரா ஆற்றுப் பள்ளத்தாக்கின் சமவெளிப் பிரதேசங்களில் உள்ள ஊர்களைச் சூறையாடுவார்கள்.

1850ம் ஆண்டிலிருந்து ஒரு கால்நூற்றாண்டு காலம் பிரிட்டிஷ்காரர்கள் அடிக்கடி இராணுவத்தை அனுப்பி நாகர்களை விரட்டியடித்து வந்தனர். ஆனால், அவர்களது கொலை, கொள்ளை முயற்சிகளைத் தடுப்பதற்காக நிரந்தரமாக எதுவும் செய்ய இயலாதவர்களாய் இருந்தனர்.

பரந்த மலைப் பிரதேசத்தில் காடுகளிலும், குகைகளிலும் ஒளிந்து கொண்டு 'கொரில்லாப் போர்' புரியும் நாகர்களை இராணுவ பலத்தைக் கொண்டு மட்டும் அடக்க முடியாது என்பதைப் பிரிட்டிஷ் அதிகாரிகள் நன்கு உணர்ந்தார்கள்.

கிறிஸ்துவ மதப் பிரசாரப் பாதிரிகளை நாகர் குன்றுகளுக்கு அனுப்பி வைத்தனர். அதனால் பிரிட்டிஷாருக்கு நல்ல பலன் ஏற்பட்டது. நாகர்களின் அட்டகாசம் ஓரளவு குறைந்தது. அவர்கள் பிரிட்டிஷாரிடம் நேச மனப்பான்மை காட்டினர்.

கிறிஸ்தவப் பிரசாரப் பாதிரிகள் ஏராளமான பண உதவி கொண்டு என்னென்ன உதவி செய்ய முடியுமோ அத்தனையும் மலைவாசிகளுக்குச் செய்து கொடுத்தனர். அதன் பயனாக இன்று நாகர்களுள் மூன்றில் ஒரு பங்கினர் கிறிஸ்தவர்களாக விளங்குகிறார்கள்.

பிரிட்டிஷார், நாகர்கள் ஜில்லாப் பிரதேசத்தை ஒரு 'பாதுகாப்பு'ப் பிரதேசமாக்கி மற்றெவரும் வர அனுமதியளிக்கவில்லை. ஹிந்து, முஸ்லிம் சமயப் பிரசாரகர்களோ அல்லது சாதாரண மக்களோ கூட நாகர்களுடன் தொடர்புகொள்ள முடியாது. கிறிஸ்துவப் பாதிரிகள் நாகர்கள் கல்விக்காக ஏற்பாடுகள் செய்தனர். ஹிந்துக்களுக்கும் அவர்களுக்கும், இந்தியாவுக்கும் அவர்களுக்கும் எவ்விதமான சம்பந்தமும் கிடையாது. அவர்கள் முற்றிலும் தனிப்பட்டவர்கள் என்ற பாடத்தை நாகர்களுக்கு இடைவிடாது போதித்து வந்தனர்.

இந்தப் பாடம்தான் நாகர்கள் பிரச்னைக்கு அடிப்படையாக அமைந்தது.

1928ல் ஸைமன் கமிஷன் இந்தியாவுக்கு வந்த காலத்திலேயே நாகர்களின் அரசியல் கிளர்ச்சிக்கான வித்து தோன்றிவிட்டிருந்தது. படித்த நாகர்கள் சிலர், அந்தக் கமிஷனுக்குச் சமர்ப்பித்துக் கொண்ட மகஜரில், 'நாகர்கள் வசிக்கும் பிரதேசம் தனிப்பட்டது. அதை மற்றெந்த ராஜ்ய நிர்வாகத்துக்கும் உட்படச் செய்யக் கூடாது' என்று வற்புறுத்திக் கூறியிருந்தனர்.

நாகர்கள் சிலர் ஸைமன் கமிஷனிடம் செய்துகொண்ட கோரிக்கை, பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரிகளின் ஆதரவும், கிறிஸ்துவப் பாதிரிகளின் ஆசீர்வாதமும் பெற்றதாகும் என்று சொல்லத் தேவையில்லை. பிறகு 'நாகா நேஷனல் கவுன்ஸில்' என்று ஓர் அரசியல் ஸ்தாபனம் தோன்றியது. இதற்குப் பிரிட்டிஷ் சர்க்கார் ஆதரவு அளித்தார்கள்.

1947ல் இந்தியா பூரண சுதந்திரம் அடைந்தபோது நாகர்கள் பிரதேசத்தில் அரசியல்துறையில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. நாகா நேஷனல் கவுன்ஸில் பிரதிநிதிகள் சிலர் அஸ்ஸாம் கவர்னரான ஸர் அக்பர் ஹைதரியைச் சந்தித்தனர். தங்கள் மக்கள் வசிக்கும் பிராந்தியங்களை யெல்லாம் ஒன்று சேர்த்து ஒரு தனிப்பட்ட மாகாணமாக்க வேண்டும், ஓரளவு சுய ஆட்சி வழங்க வேண்டும் என்று கோரினர். இதன் பயனாக ஹைதாரி ஒப்பந்தம் என்று ஒன்று ஏற்பட்டது. இந்த ஒப்பந்தத்தின் 9வது பிரிவில் 'ஒப்பந்தம் அமுலுக்கு வந்த தினத்திலிருந்து பத்து வருடங்கள் முடிந்த பிறகு நாகர்கள் அதைப் புதுப்பிக்கும்படி கோரலாம், அல்லது வேறு புதிய ஒப்பந்தம் ஏற்படுத்திக்கொள்வதைப் பற்றிக் கோரலாம்' என்றிருக்கிறது.

நாகர்கள் வசிக்கும் பிராந்தியத்தில் எத்தகைய நிர்வாகம் ஏற்பட்டாலும் அது, இந்தியக் குடியரசுக்கு உட்பட்டதாகத்தான் இருக்கும் என்ற அடிப்படையின்மீதுதான் ஒப்பந்தம் ஏற்படுத்திக் கொள்ளப்பட்டது. கொள்ளப்பட்டிருக்கும் என்பது யாருக்கும் தெரியும். ஆனால், நாகா நேஷனல் கௌன்ஸில் தலைவர் பிஸோ இந்தக் கருத்தை ஒப்புக்கொள்ளவில்லை. பத்து வருடங்கள் கழித்துப் புதிதான ஒப்பந்தம் ஏற்படுத்திக்கொள்ளலாம் என்றால், அப்போது இந்தியத் தொடர்பற்ற பரிபூரண சுதந்திர ஆட்சியைக் கோர உரிமை உண்டு என்று வியாக்கியானம் செய்தார். இந்தத் தவறான விஷமத்தனமான விதண்டாவாத வியாக்கியானந்தான் நாகர்கள் விஷயத்தை மிகவும் சிக்கலான பெரிய அரசியல் பிரச்னையாகச் செய்துவிட்டது.

1952ல், பிஸோ, நேருஜியைச் சந்தித்துப் பேசினார். ஆனால் நேருஜி பரிபூரண சுதந்திரத்தைப் பற்றி யோசித்துப் பார்ப்பதற்கே இல்லை என்று கண்டித்துக் கூறிவிட்டார். அந்த வருடம் நடந்த அஸ்ஸாம் சட்டசபைத் தேர்தலை நாகர்கள் பகிஷ்காரம் செய்தனர்.

பிஸோ, பிரச்னையை ஐ. நா.வுக்குச் சமர்ப்பிக்கப் போவதாகப் பயமுறுத்தினார். திருட்

டுத்தனமாகப் பர்மாவுக்குச் சென்றார். ஆனால் பர்மிய அதிகாரிகள் அவரைத் திரும்ப கோஹிமாவுக்கு அனுப்பிவிட்டனர். இதிலிருந்து பிஸோவின் அதிக்ரமச் செயல்கள் ஆரம்பமாயின. அவர் அரசாங்க அதிகாரிகளையும், அவர்களுடன் ஒத்துழைத்து வந்த நாகர்களையும் கொல்லத் திட்டமிட்டு அவ்வாறே செய்து வந்தார். அவர் தலைமறைவாக இருந்து இந்தக் காரியங்களையெல்லாம் செய்து வந்தார். ''நாகா ஹோம் கார்டு' ஒன்றை ஸ்தாபித்தார். இதில் கிட்டத்தட்ட 3,000 பேர்வரை சேர்த்து ஒரு படையாக்கினார். கொலையும், கொள்ளையும், தீவைத்தலும் நாட்டில் தாண்டவமாடின. இவற்றினால் பெரிதும் பாதிக்கப்பட்டவர்கள் நாகர்களே.

பிஸோவின் இந்தக் கொடுஞ் செயல்களைக் கண்டு அவர் சகாக்கள் பலரே வெறுப்புற்று விலகினர். ஸக்ரீ என்பவர் ஒரு தாராளக் கட்சி ஏற்படுத்தி அதன் தலைவரானார். ஆனால் பிஸோ அவரைத் திருட்டுத்தனமாகப் பிடித்து வரச்செய்து, அவரைச் சித்திரவதைக்குள்ளாக்கிக் கொலை செய்யச் செய்தார். இது சம்பந்தமாக அவர் மீது கொலைக் குற்றம் சாட்டப்பட்டிருக்கிறது.

1957ல், அதாவது ஹைதரி ஒப்பந்தம் ஏற்பட்ட பத்தாவது ஆண்டில் அகில நாக வகுப்பினர் மகாநாடு ஒன்று நடந்தது. மகாநாட்டினர் அரசாங்கத்துடன் ஒத்துழைக்கத் தயாராயிருந்தனர். 1958ல் நடைபெற்ற மூன்றாவது அகில நாக வகுப்பினர் மகாநாடு ஓர் உருப்படியான திட்டத்தைப் பற்றி யோசனை செய்தது. நாகர்கள் ஜில்லாவான கோஹிமா பிரதேசம், மற்றும் நாகர்கள் வசிக்கும் பகுதிகள் எல்லாவற்றையும் சேர்த்து 'நாகாலாந்து' என்று ஒரு தனி ராஜ்யமாக அமைக்க வேண்டும் என்றும், அதற்குச் சட்டசபை மந்திரி சபை முதலியன ஏற்படுத்த வேண்டும் என்றும், ராஜ்யம் இந்திய அரசாங்கத்தின் அந்நிய நாட்டு இலாகாவினால் ஒரு கவர்னர் மூலமாக நிர்வகிக்கப்பட்டு வரவேண்டும் என்றும் ஒரு திட்டம் வகுத்தது.

இந்தத் திட்டத்தைப் பிரதம மந்திரி ஏற்றுக் கொண்டார். திட்டம் சட்டசபைகளில் நிறைவேறியதும், 'நாகாலாந்து' சட்டபூர்வமான ராஜ்யமாயிற்று. அந்தப் புது ராஜ்யம் சம்பிரதாயமாக 1–12–1963ல் தொடங்கி வைக்கப்பட்டது. அதன் முதன் மந்திரி ஸ்ரீ ஷிலு ஆஓ!. 'ஆஓ' என்பது நாகர் வகுப்புகளுள் ஒன்றின் பெயர்.

அவர் மற்றும் நான்கு மந்திரிகளின் உதவி கொண்டு நிர்வாகத்தை நடத்தி வந்து கொண்டிருக்கிறார்.

இந்திய சர்க்கார், நாகர்களுக்கு என்னென்ன வசதிகள் செய்து கொடுக்க முடியுமோ அத்தனையையும் செய்து கொடுப்பதில் தீவிரமாக இருந்து வருகிறார்கள். அதற்குத் தேவையான பணமெல்லாம் தாங்களே செலவழிக்கிறார்கள்.

இத்துடன் நாகாலாந்து ராஜ்யக் கதைக்கு மங்களம் சொல்லியிருக்க வேண்டும். ஆனால் அப்படிச் செய்ய முடியவில்லை.

நாளுக்கு நாள் பிஸோவின் கொலைகளும் கொள்ளைகளும் அதிகரித்துக் கொண்டு வந்தன. இந்திய அரசாங்கம் வேறு வழியின்றி எல்லைப்புறப் போலீசுக்கு உதவியாக இராணுவத்தினரையும் நாகாலாந்தில் நிலைநிறுத்தியிருக்கிறது. ஆயினும் அவர்களாலும் நாகர்களை முழுவதும் அடக்கி வைக்க முடியவில்லை. நாகாலாந்து மலைப் பிரதேசத்தின் அமைப்பு கலகக்காரர்களுக்குப் பெரிதும் உதவியாயிருக்கிறது.

பிஸோ 'நாக பெடரல் குடியரசு' அரசாங்கம் அமைத்தார். அதற்குப் பதினறு அங்கத்தினர்கள் வேறு. 1960ம் ஆண்டில் அவர் எப்படியோ இந்தியாவிலிருந்து தப்பி லண்டனை அடைந்தார். அங்கே பூஜ்ய மைகேல் ஸ்காட் பாதிரியாரின் அன்பார்ந்த ஆதரவில் இருந்து வருகிறார். அவர் இந்திய இராணுவத்தினரால் கொல்லப்பட்ட நாகர்களின் ஜாபிதா ஒன்று கிராமவாரியாகத் தயாரித்து அந்த விவரங்களடங்கிய அறிக்கை ஒன்று வெளியிட்டார். இதில் வேடிக்கை என்னவென்றால், ஜாபிதாவில் கண்டவர்கள் பலர் பிஸோ கோஷ்டியினராலேயே கொல்லப்பட்டவர்கள். பிஸோ கோஷ்டியினருக்கும் சமாதானமாக வாழும் கிராமவாசிகளுக்குமிடையே ஏற்பட்ட சச்சரவுகளின் பயனும் மாண்டவர்கள்.

பிஸோ இந்தியாவுக்கு வர முயன்று கொண்டும், சமாதானப் பேச்சு பேசிக் கொண்டும் இருக்கிறார்.

நாகாலாந்தில் முக்கால்வாசிமக்கள் இந்திய அரசாங்கத்தின் தொடர்பு கொண்டு அதன் உதவியினால் தங்கள் நாட்டை அபிவிருத்தி செய்துகொண்டு சமாதானமாக வாழ விரும்புகின்றனர். ஆனால் பிஸோவின் ஆட்கள் அதற்கு இடம் கொடுக்காமல் விஷமம் செய்து கொண்டே இருக்கின்றனர். கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து இவர்களுக்கு ஆயுத உதவியும், பண உதவியும் கிடைத்து வருகின்றனவாம்!

நாகர் மக்கள் பெரும்பாலோர் இந்தியாவுடன் தொடர்பு கொண்டு அமைதியாக வாழ விரும்புகின்றனர். இந்திய அரசாங்கமும் அவர்களை நாகரிகப்படுத்தி வந்தும், அவர்களுக்கு உதவி செய்து கொண்டுமிருக்கிறது. ஆயினும், 'பரிபூரண சுதந்திரம்' என்ற இரண்டு வார்த்தைகள்தான் குறுக்கிட்டு நாகாலாந்தை இடைவிடாத போர்க்களமாக்கி வருகிறது.

சமீபத்தில் பார்லிமெண்ட் அங்கத்தினர்களின் கோஷ்டியினருள் ஒருவராக நாகலாந்து சென்று பார்த்து வந்த ஸ்ரீ எம். ஆர். மஸானி அந்தப் பிரதேசப் பிரச்னையைப் பற்றி மிக அழகாக எடுத்துக் கூறியிருக்கிறார். அவர் சொல்கிறார்:

> ''உயர்தர சோக நாடகமென்பது நியாயமானதற்கும், நியாயமற்றதற்குமிடையே ஏற்படும் போராட்டமன்று; நியாயமானதற்கும் நியாயமானதற்குமிடையே ஏற்படும் போராட்டமாகும் என்று கூறப்பட்டிருக்கிறது. நாகாலாந்தினுடையது அத்தகைய சோக நாடகமாகும்.''

"பத்து வருடங்களுக்கு முன்பு
... நினைவிருக்கிறதா? உங்கள்
திருமணத்தன்று என்னையும்
உங்கள் வாழ்க்கைத் துணையாகத்
தேர்ந்தெடுத்ததை?"



# ஹெர்குலிஸ்

வெறும் சைக்கிள் மட்டுமன்று; வாழ்நாள் முழுதும் உழைக்கும் ஓர் உறுதுணை



JWT-TIC-H-2900

திருமண நாளின் இந்த பத்தாவது நினைவு நாள் ... ஹெர்குலிஸுக்கும் சரி, அதன் சொந்தக்காரருக்கும் சரி ... பெருமிதமூட்டும் நன்னாள்.

நீங்கள் ஒரு ஹெர்குலிஸ் சைக்கிள் வாங்கும்போது உங்கள் வாழ்க்கையுடன் அது ஒன்றிவிடுகிறது. ஆண்டுகள் செல்லச் செல்ல உங்கள் வாழ்க்கை மாறும் ... உத்தியோக உயர்வுகள் கிடைக்கும் ... உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாவார்கள் ... மணம் புரிந்து வேறிடங்களில் புது வாழ்க்கை தொடங்குவார்கள். ஆனால் உங்கள் ஹெர்குலிஸ் எப்போதும் உங்களுடனேயே இருக்கும் — எப்போதும் நன்கு பணி புரிந்தபடியே இருக்கும்.

டி. ஐ. சைக்கிள்ஸ் ஆப் இந்தியா
அம்பத்தூர், மதராஸ் 53

உரிமையாளர்கள் :
டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆப் இந்தியா லிமிடெட், சென்னை

# கயல்விழி



அகிலன்

### இருபத்திநான்காம் அத்தியாயம்

## இதயம் பிளந்தது!

**சு**ந்தர பாண்டியனின் கடுசொல் கேட்டுக் கயல்விழி துடித்துக் கொண்டிருந்தாள். சுந்தரபாண்டியனின் கரத்தில் பாமினி அனுப்பி வைத்த ஓலை துடித்துக் கொண்டிருந்தது.

பாமினி எழுதியிருந்தாள்:

''இளவரசே! தாங்கள்தாம் பாண்டிய நாட்டு இளவரசர் என்பதை அறிந்தவுடன், சோழ நாட்டுப் போரில் தாங்கள் வெற்றி பெற வேண்டும் என்று நான் இறைவனிடம் முறையிட்டேன். தங்களுடைய வெற்றி ஒரு வகையில் எங்களது தோல்வி என்பதை அறிந்தும் தங்களுடைய செயலில் தர்மம் இருந்ததால் நான் அவ்வாறு வேண்டிக் கொண்டேன்.

நட்புறவுக்காகத் தாங்கள் புலவரையும் கயல்விழியையும் தூது அனுப்பிய போது, அதன் வெற்றிக்காக நானும் என் அன்னையாருமே தந்தையாரிடம் முறையிட்டோம்.

வெண்ணெய் திரண்டு வரும்போது தாழியை உடைத்து விட்டீர்கள். மீண்டும் இராஜ இராஜனைப் போரில் வென்று சிறையிலடைப்பதற்குக் காரணங்கள் இருக்கலாம். ஆனால் தாங்களும் என் தந்தையாரும் கூடிப் பேசியே ஒரு நல்ல முடிவுக்கு வந்திருக்கலாம்.

தாங்கள் அரசர். என்னைவிட வயதிலும் அநுபவத்திலும் தேர்ந்தவர்கள். ஆனால் நானும் ஓர் அரச குலப் பெண் என்ற முறையில் சொல்கிறேன்: ஒரு முறை போரில் வென்றுவிட்டால், போர்க்களத்தின் இரத்தச் சுவை அரசர்களைப் போர் வெறியர்களாகவே மாற்றி விடுகிறது. இந்த வகையில் தாங்களும் என் தந்தையும் ஒன்றுதான்.

முன்பு காஞ்சியில் என்னிடம் விடை பெற்றுக் கொண்டபோது, எங்கள் அன்புக்கு நன்றி சொல்ல மீண்டும் தந்தையை வந்து காணப் போவதாக வாக்களித்தீர்கள். இப்போது போர் முனையில் நின்று வாள் முனையில் அன்பு சொல்லத் துணிந்து விட்டீர்கள் !

ஒன்று, தங்களது அன்பை நாடித் துடிக்கும் என் இதயத்தில் வாள் பாய்ச்சி விட்டுப் பிறகு போர் தொடங்குங்கள்; அல்லது, என் கரம் பற்றி நம் இரு நாடுகளையும் அன்பாலும் உரிமையாலும் ஒன்றி வாழச் செய்யுங்கள்.

தங்களை மறவாத
**பாமினி.''**

ஓலையை எழுதியவள் மீது சுந்தர பாண்டியனுக்குச் சீற்றமில்லை. அதை எழுதச் செய்தவள் மீது அவன் சீறினான். அதைச் சுமந்துகொண்டு தன்னிடம் வந்தவள் மீது அவன் ஆத்திரம் கொண்டான்.

''பாமினி ஒரு நிகழ்ச்சியைத் தங்களிடம் நினைவூட்டும்படி என்னிடம் கேட்டுக் கொண்டாள்'' என்றாள் கயல்விழி; ''கங்காபுரியில் தாங்கள் பாடி முடித்தவுடன் தங்கள் மார்பில் வாள் பாய்ச்சத் துணிந்தானும் இராஜராஜன். குலோத்துங்கர்கூட அதைத் தடுக்க முயலவில்லையாம். எதிர்பாராத வேகத்தில் அவன் பாய்ந்ததால் வீர நரசிம்மனும் அதிர்ச்சியுற்று விட்டாராம். பாமினி வந்து தடுத்திருக்காவிட்டால் அப்போதே....'' அதற்கு மேல் பேச முடியாமல் கயல்விழியின் குரல் தழுதழுத்தது.

''அதற்காக நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான் பாண்டியன். ''அவள் என் உயிரைக் காப்பாற்றியது உண்மைதான். அதற்குப் பதிலாக நானக்கு என் உயிரையே போர்க்களத்தில் அவள் தந்தையிடம் கொடுத்து விடுகிறேன். உயிர் எனக்குப் பெரிதில்லை. உயிரைவிட மேலான ஒன்றை அவள் கேட்கிறாள். அதை என்னால் கொடுக்க முடியாது.''

''அவள் எதையும் கேட்கவில்லை. தன்னையே தங்களிடம் கொடுக்கத் துடிக்கிறாள்.''

''கயல்விழி!'' என்று கத்தினான் சுந்தர பாண்டியன். ''என் தலைவியான நீ என்றைக்கு அவளுடைய தோழியாக மாறினாய்? ஏன் மாறினாய்? சொல்! உடனே சொல்லி விடு !''

இளங்குருத்துப் போன்ற கயல்விழியின் தோளைத் தன் முரட்டுக் கரத்தால் பற்றிக் குலுக்கினான் சுந்தரபாண்டியன். கயல்விழி தன் பற்களைக் கடித்துக் கொண்டாள். உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

''நான் தங்களுக்குத் தலைவியாக இருக்கும் பாக்கியத்தைப் பெறுதவள் என்று முன்பே பொன்னமராவதியில் கூறியிருக்கிறேன். இப்போது அந்தப் பாக்கியத்தைப் பெற்ற தலைவிக்குத் தோழியாக வந்திருக்கிறேன்!'' என்றாள் கயல்விழி.

''அப்படியானால் நீ காஞ்சிக்குத் தூது சென்றது இதை முன்னிட்டுத் தான் சென்றாயா?''

''ஆமாம்!''

''கயல் விழி!'' என்று குரலில் கண்ணீர் மல்க அவளைக் கனிவோடு அழைத்தான் சுந்தர பாண்டியன். ''அணுவளவாவது என் மீது அன்பு கொண்டிருக்கிறாயா நீ? அன்பு கொண்டிருந்தால் இப்படிச் செய்யத் துணிந்திருப்பாயா ?''

''தங்கள் மீதுள்ள அன்பு ஒன்றைத் தவிர அணுவளவும் வேறு உணர்ச்சிக்கே என்னிடம் இடமில்லை இளவரசே ! அதனால்தான் இப்போது தங்களிடம் அன்புத் தூது வந்திருக்கிறேன்'' என்றாள் கயல்விழி.

''நீ இதில் வெற்றி பெறப் போவதில்லை !'' என்று விரக்தியோடு கூறினான் சுந்தரபாண்டியன்; ''நானும் போரில் ஏற்படப் போகும் வெற்றி தோல்விகளைப் பொருட்படுத்தப் போவதில்லை. என் ஆத்திரம் தீரப் பகைவர்களைக் கொன்று குவிக்கப் போகிறேன். பகைவர்களும் அப்படியே என் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ளட்டும். வெற்றி

உனக்கா எனக்கா என்பதை இந்தப் போரே முடிவு செய்யட்டும்!''

வெறி கொண்டு விட்ட புதல்வனைத் தாய் ஒருத்தி தன் பாசத்தோடு தழுவி அவன் மீது அன்பைச் சொரிவது போல், அவன் கரங்களைப் பற்றிக் கொண்டு அவற்றில் கண்ணீர் சொரிந்தாள் கயல்விழி.

''என் அன்பின் மீது தங்களுக்குச் சந்தேகம் பிறந்து விட்டதா?'' என்று கேட்டாள். ''அன்பு என்பது என்ன? அன்பு கொண்ட தங்களுக்கு என் உடல், பொருள், ஆவி, சிந்தனை, செயல் யாவற்றையுமே வழங்குவது தானே? அதைவிட உயர்ந்த அன்பு தங்களுடைய இலட்சியத்தின் வெற்றிக்காக அனைத்தையும் வழங்குவதில் தான் இருக்கிறது. நான் எப்போதும் தங்களுக்குப் பணி செய்யச் சித்தமாயிருக்கிறேன்.''

''இல்லை! உன்னைக் கொடுக்கத் துணியவில்லை நீ!'' என்றான் இளையபாண்டியன்.

''தாங்கள் உடனடியாகப் போரை நிறுத்தி விட்டு நம் நாட்டை அழிவிலிருந்து காப்பாற்றுங்கள். பாமினியை மணந்து கொண்டு நிரந்தரமான அமைதிக்கும் உறுதிக்கும் வழி கோலுங்கள். ஒரு நாட்டையே உருவாக்கிய தலைவர் என்ற முறையில் சிந்தித்துப் பாருங்கள், இளவரசே! நான் தங்களுடைய அடிமையாக வாழ்கிறேன்; தாசியாக வாழ்கிறேன். என்னைத் தலைவியாக்க நினைப்பது எனக்குத் தண்டனையளிப்பதாகும்.''

சுந்தரபாண்டியனின் நெற்றி சுருங்கியது: ''ஏதோ எனக்கே தெரியாத



ஓர் இரகசியம் சூழ்ந்த பெண் உனக்குள்ளே இருக்கிறாள். அவள்தான் இவ்வாறு எனக்கு எதிராக உன்னைப் போராடத் தூண்டுகிறாள். திருக்கொடுங்குன்றத்திலிருந்தே அவளுடைய இந்தப் போராட்டத்தை நான் கவனித்து வருகிறேன்'' என்றான்.

வேல் பாய்ந்தது போல் சுரீரென்று கயல்விழியின் உள்ளத்தில் தைத்தன இந்தச் சொற்கள். இந்த வேதனையை மறைப்பதற்காக அவனிடம் அவள் புன்னகை பூத்தாள்.

''ஓர் இரகசியமும் இல்லை! தாங்கள் தாம் எனக்கு இந்த இராஜதந்திர இரகசியத்தையே கற்றுக் கொடுத்தீர்கள். கோசல சாம்ராஜ்யத்து வல்லாளதேவர் சோழமாதேவியை மணந்து கொண்டதால் எவ்வாறு இரு சாம்ராஜ்யங்களும் செழித்தோங்கி வளர்ந்தன என்பதைத் தாங்கள்தாம் என்னிடம் கூறினீர்கள். அதே திருமண உறவின் வலிமையால்தான் இப்போது கூடக் கோசல நாடு நம் நாட்டை அழிக்கப் பார்க்கிறது. அதனால்தான் நானும் இப்போது திருமண உறவின் மூலம் நம் பகையை அழித்து அன்பை வளர்க்கத் தூது வந்திருக்கிறேன். இரகசியம் தாங்கள் கற்றுக் கொடுத்த இரகசியம்தான்!''

கயல்விழியின் மோகனச் சிரிப்பில் அவளுடைய ஆழ்ந்த துயரம் இழையோடுவதை அவன் கண்டான். தாயின் மடியில் தலை சாய்ந்துள்ள குழந்தையின் உணர்வே அவனுக்கு அப்போது ஏற்பட்டிருந்தது. கயல்விழி அவனது கற்பனைக்கும் எட்டாத உயரத்துக்கு அவன் கண் முன்னே வளர்ந்து கொண்டிருந்தாள்.

''இந்த ஓலைக்குத் தாங்கள் கூறும் மறுமொழியிலோ, தாங்கள் கொடுக்கும் மாற்றோலையிலோ பாண்டிய நாட்டின் எதிர்காலம் இருக்கிறது. நாட்டின் தலைவர் என்ற முறையில் சிந்தனைசெய்து ஒரு முடிவு கூறுங்கள். நமது சொந்த வாழ்வை இழந்தாவது குடிமக்களின் வாழ்வைக் காப்பாற்றக் கடமைப் பட்டவர்கள் நாம்.''

ஆயிரம் மின்னல்கள் பளீர் பளீரென்று சுந்தர பாண்டியனின் சிந்தனையில் மின்னின. குலசேகர பாண்டியரிடம் அவன் செய்து கொடுத்த சபதம் அவனுடைய நினைவுக்கு வந்தது. அவரும் இப்படித்தான் கூறினார்: ''வெற்றி என்பதும் நம்முடைய இழப்பின் வாயிலாகத்தான் நமக்குக் கிடைக்கிறது. ஒன்றை நாம் இழக்கத் துணியாமல் மற்றொன்றைப் பெற முடியாது. அமைதிக்காகவும் நட்புறவுக்காகவும் நீ எதையேனும் இழக்க நேர்ந்தால் அதற்காகத் தயங்காதே! நீ இந்த நாட்டின் தலைவன்; குடிமக்களின் தந்தை!''

சரேலென்று கட்டிலிலிருந்து குதித்தான் சுந்தர பாண்டியன். மௌனமாகவே பாசறைக்குள் குறுக்கும் நெடுக்கும் நடந்தான். 'கயல்விழியா? பாண்டிய நாடா? கயல்விழியா? பாண்டிய நாடா......?'

அவனுடைய இதயமே குபீரென்று பற்றி எரிவது போல் தோன்றியது. அந்தத் தீயை அணைக்கும் குளிர் அருவியான கயல்விழி அருகிலேயே இருந்தாள். ஆனால், அவனது இதயத் தீ அணையுமானால், அதையடுத்துப் பாசறை முழுதும், பாண்டிய நாடு



முழுவதும் கோசல நாட்டுத் தீ பரவி விடுமே !

பரவட்டும் தீ! இதயமே வெந்து தணியும்போது, நாடு போனால் என்ன, மக்கள் போனால் என்ன, அரச வாழ்வு போனால்தான் என்ன?

''நாழிகையாகிறது: நான் உடனடியாகத் திரும்ப வேண்டும்'' என்றாள் கயல்விழி; ''இப்போதே நான் திரும்பவில்லையானால் அங்கு விழுப்பரையர் அவர்களுக்கு ஏதும் துன்பம் நேரலாம். பாமினிக்குத் தங்கள் கரத்தால் ஓர் ஓலை தருகிறீர்களா ?''

''முடியாது!'' என்று கூறித் தலையசைத்தான் சுந்தர பாண்டியன் ; — ''நான் உன்னை இழக்க முடியாது.''

விடிவெள்ளிக்கு முன்பாக வீரர்களைத் துயில் எழுப்பும் முரசு பாசறையைச் சுற்றிலும் அதிர்ந்தது. ஆளரவமும் கேட்கத் தொடங்கியது. கயல்விழி விரைந்து செல்வதற்காகத் துடிதுடித்தாள். அவனிடம் கெஞ்சினாள்; புலம்பினாள்; மன்றாடினாள்.

விழுப்பரையர் மட்டிலும் கோசல நாட்டாரிடம் இருந்திருக்காவிட்டால் கயல்விழியை அவன் அனுப்பியிருக்க மாட்டான். சுந்தரபாண்டியனுக்காகவும் நாட்டுக்காகவும் தமது ஒரே குமாரனைப் பலி கொடுத்த உத்தமரை நினைத்தவுடன் அவனுக்கு உடல் புல்லரித்தது.

கயல்விழியை அவன் தடுக்கவில்லை. முரசுகள் தொடர்ந்து அதிர்ந்தன.

காவேரிக் கரையில் அவன் நின்றான். தோணிக்குள்ளே துவண்டு கிடந்த கயல்விழியான அவனுடைய இதயம் இரு கூறாகப் பிளந்து, ஒரு பாதியை இந்தக் கரையில் விட்டு, மறு பாதியை மறு கரைக்கு இழுத்துச் சென்றது.

## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# கள் வெறிக் களிறு

சுந்தர பாண்டியன் தன்னுடைய மனத்தை ஒரு நிலையில் நிறுத்திப் போர் தொடங்குவதற்கான ஆயத்தங்களைச் செய்ய முயன்றான். பணியாட்கள் கூறன்றோடி வந்து அவன் களத்துக்குப் புறப்படுவதற்கான வேலைகளில் முனைந்தனர். கவசத்தை அணிவித்தான் ஒருவன்; உடை வாளைப் பணிவுடன் எடுத்து நீட்டினான் மற்றொருவன்; தலை முடியை ஏந்தி நின்றான் வேறொருவன்.

சுந்தரபாண்டியனால் மட்டும் அவன் மனத்தை ஒருநிலைப்படுத்த முடியவில்லை. கூண்டிலிருந்து பல்வேறு திசைகளிலும் பறந்து செல்லும் வெண் புறாக்களைப் போல் அது கட்டுக்கடங்காமல் பறந்தது. அவனுடைய கலக்கத்தைக் கண்ணுற்ற வீரர்களோ, அதற்குள்ளாகவே போர்வெறி அவனை ஆட்கொண்டு விட்டதாக நினைத்தார்கள்.

பாசறைக் கூடங்களுக்குக் கிழக்கில் சற்றுத் தொலைவில் காவேரி பரவலாக ஓடியது. ஆற்றின் அந்தப் பகுதியில் ஆழமில்லை. பரந்து கிடந்த மணல் திட்டுக்களும் படிகம் போன்ற நீர்ப் படலமுமாக அந்த இடம் போருக்கு ஏற்ற இடமாகத் தோன்றியது. ஆற்றின் எதிர்க் கரையில் கோசலப் படைகளும் இந்தக் கரையில் பாண்டியப் படைகளுமாக வந்து குவிந்தவண்ணம் இருந்தன.

வெறியூட்டும் இசைக் கருவிகள் இருபுறமும் முழங்கின. போர்ப்பறைகள், கொம்புகள், முரசுகள், சங்குகள் யாவுமே ஒன்றுகூடி வீரர்களின் செவி நரம்புகளைத் தவிடுபொடியாகச் செய்தன. அவர்களுடைய நெஞ்சுகளைத் தட்டி எழுப்பி, அவர்களைக் கள்வெறி கொள்ளச் செய்தன.

கொலை வெறி ஒவ்வொரு வீரனின் குருதியிலும் கணத்துக்குக் கணம் விஷம் போல் ஏறிக் கொண்டிருந்தது. நெஞ்சிலே மூண்ட தீ தலைக்குள்ளே பரவி அங்கிருந்த சிந்தனைப் பீடத்தைச் சூழ்ந்து கொண்டு விட்டது. 'கொலை, பழி, இரத்தம், கொலை பழி, இரத்தம்!'' என்று மீண்டும் மீண்டும் சொல்வது போலவே அங்கிருந்த அத்தனை இதயங்களும் அடித்துக் கொண்டன.

முதல் நாள் வரையிலும் அந்த ஆற்றின் இரு கரைகளிலும் மருந்துக்குக்கூட ஒரு கற்பாறையைக் காண முடியாத போது, இன்று மட்டிலும் எப்படி அங்கே குன்றுகள் குவிந்தன! மலைகள் முளைத்தன!

போர் யானைகளுக்கு மதுவூட்டி வெறியேற்றி அங்கே கொண்டு வந்து நிறுத்தி யிருந்தார்கள். இயல்பாகவே மதங் கொண்டவை போல் தோன்றிய யானைகள் மதுவையும் மாந்திவிட்டால் கேட்கவா வேண்டும்? மேலும் குதிரைப் படைகள், தேர்ப் படைகள், தரைப் படைகள் யாவும் அணி அணியாக இருபுறங்களிலும் சூழ்ந்தன.

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில் ஒரே தேய்ப்பில் கால்கேட் டெண்டல் க்ரீம், துர்நாற்றத்தையும், சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சதவிகிதத்தை ஒழித்துவிடுகிறது.

கால்கேட், 10ல் 7 சந்தர்ப்பங்களில் உடனடியாக வாய் துர்நாற்றத்தை அகற்றுகிறது என்பதையும், உணவு உட்கொண்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், இது வரை பற்பசை வரலாற்றிலேயே கண்டிராத பெருமளவில் ஏராளமானவர்களுக்குச் சொத்தை தடுக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான ஆராய்ச்சிகள் நிரூபித்துள்ளன. இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு.

கால்கேட்டின் கிடைத்திருக்கும், நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்தப் பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பலமாதங்களுக்கு வரும்.




பற்கள் சுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்மையான பற்களைப் பெறவும் வழக்கமாக கால்கேட்டினால் பல் துலக்குங்கள்.




... உலகிலேயே பெரும்பாலானவர்கள் மற்றெல்லாப் பற்பசைகளையும் விட, கால்கேட் டெண்டல் க்ரீமையே வாங்குகிறார்கள்.

கொலைப் பசியின் கொக்கரிப்பு அங்கே பயங்கரமாக முழங்கியது. பறையொலி அனைவரையும் சாவுக்குக் கூவி அழைத்தது. கொம்பொலி அவர்களை, 'கூற்றுவனின் தூதுவர்களே!' என்று அழைத்துக் கும்மாளமிடச் செய்தது. சங்கொலி அவர்கள் மயான பூமிக்கே வந்து விட்டார்கள் என்பதை அவர்களுக்கே நினைவூட்டியது.

எதிர்க்கரையெங்கணும் புலித்தலைக் கொடிகள்! இக்கரையெங்கணும் துள்ளுமீன் கொடிகள்! இருபுறங்களிலும் வேல்கள், விற்கள், வாட்கள், இரும்புலக்கைகள், தீப்பந்தங்கள்!

தீப்பந்தம்! — சிந்தனைத் தீ இல்லாத மந்தைக் கூட்டம் தன்னைத் தானே அழித்துக் கொண்டு மடியட்டும் என்று தான் இறைவன் அணுத் துளி போன்ற நெருப்புக்குள்ளே அபாயகரமான — அழிவுச் சக்தியை நிரப்பி வைத்திருக்கிறான் போலும்! ஆற்றங்கரை இப்போது கடலையாகவும் காட்சியளித்தது.

களத்தின் காட்சியைக் கண்டவுடனேயே பிணம் தின்னும் கழுகுக் கூட்டம் கார்மேகப் படலம் போல் வானில் கவியத் தொடங்கியது. காட்டுப் புதர்களுக்குள் பதுங்கிக் கிடந்த குள்ள நரிக் கூட்டம் தனது நாவைத் தீட்டிக் கொண்டது. ஊர்ப்புறத்தின் சொறி நாய்க் கூட்டம் முன்னதாகவே நிண விருந்துண்ணக் காத்திருந்தது.

அறிவிலும் ஆற்றலிலும் சிறந்த மூவேந்தர்களும் மூவாயிரம் போர்க்களங்களையாவது கண்டிருப்பார்கள்! தங்களைத் தாங்களே கொன்று குவித்துக் கொண்டிருப்பார்கள்! அவர்கள் வள்ளுவனைப் படித்தார்கள்; அவன் சொற்படி நடந்தாரில்லை. இளங்கோவைக் கற்றார்கள்; கற்றபடி நின்றாரில்லை. கம்பனைப் போற்றினார்கள்; கம்பன் வழி சென்றாரில்லை. அரசு எவ்வழி அவ்வழி மக்கள்!

சுந்தரபாண்டியனும் அதே தமிழ்ப் பரம்பரையில் வந்தவன்தானே? முதற் போரில் வெற்றிச் சுவையையும் இரத்தச் சுவையையும் கண்டு விட்டதால், அவனுகவே முந்திக் கொண்டு வந்து விட்டான் அடுத்த போருக்கு.

# சட்டத்தின் தோல்வி

குட்டிக் கதை

**ப**ஞ்சத்தின் மேல் ஏறி, பசி ஊர்வலம் வந்து கொண்டிருந்தது.

"இனி எனக்கு இங்கே இடமில்லை!" என்றது அன்பு.

"எனக்கும் அதே கதிதான்!" என்றது பண்பு.

வெட்கம், "இனி என்னை யார் பொருட்படுத்தப் போகிறார்கள்?" என்றது வேதனையுடன்.

வேட்கை, "ரொம்ப நல்லதாய்ப் போயிற்று: நீ என்று தொலைகிறாயோ, அன்றுதான் எனக்கு நிம்மதி!" என்றது மகிழ்ச்சியுடன்.

இதைக் கேட்டுக்கொண்டே வந்த மானம், "மனிதன் போகிற போக்கைப் பார்த்தால் என்னைக்கூடத் துறந்து விடுவான் போலிருக்கிறது!" என்றது பெருமூச்சுடன்.

"உனக்கே அந்தக் கதி என்றால், எனக்கு என்ன கதி?" என்றது மரியாதை.

அப்போது ஈகை தலைகுனிந்தபடி அங்கே வர, "உன்னுடைய நிலையும் அதே நிலைதானா?" என்று கேட்டது இரக்கம்.

"அதில் வேறு சந்தேகமா?" என்றது பொய்.

"இல்லை, அப்பனே, இல்லை, என்னைப் பொறுத்தவரை அதில் எனக்குச் சந்தேகமே இல்லை. ஏனெனில், 'பசி வந்திடப் பத்தும் பறந்து போம்' என்பது எனக்குத் தெரியும்!" என்றது உண்மை.

இந்தச் சமயத்தில் யாரோ கலகலவென்று நகைக்கவே, "யார் அது?" என்று கேட்டுக்கொண்டே திரும்பிப் பார்த்தது ஊக்கம். "கவலை வேண்டாம்; உங்கள் அனைவரையும் காப்பாற்ற நான் இருக்கிறேன்!" என்றது சட்டம்.

"பூ, நீதானா! எங்களை நீ காப்பாற்றுவது ஒரு பக்கம் இருக்கட்டும். முதலில் உன்னை நீயே காப்பாற்றிக்கொள்ள முடிகிறதா என்று பார்!" என்றது அது.

"ஏன் முடியாது?" என்று அதைத் திருப்பிக் கேட்டது இது.

"அதோ பார், அந்தப் பட்டினியை! அரிசி வைத்துக் கொண்டே 'இல்லை' என்று சொன்னதற்காக அது ஒரு வியாபாரியைக் குத்திக் கொன்று விட்டது!" என்றது ஊக்கம்.

"இவ்வளவுதானே? இதோ பார், இந்தப் பட்டினியை நான் என்ன செய்கிறேன் என்று!" என்று சூள் உரைத்துக்கொண்டே விரைந்தது சட்டம்.

அதற்குள் அந்தப் பட்டினி தன்னையும் குத்திக் கொன்றுகொண்டு விடவே, "இப்போது அதை உன்னால் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டது ஊக்கம்.

"ஒன்றும் செய்ய முடியாது அப்பனே, ஒன்றும் செய்ய முடியாது!" என்று தன் தோல்வியை ஒப்புக் கொண்டது சட்டம். -விந்தன்



பொழுது நன்ருகப் புலர்ந்து விட்டது. ருத்திரதேவனின் நெற்றிக் கண்ணே போல் கீழ்த் திசையிலிருந்து செவ்விரத்தம் பொழிந்து கொண்டே கதிரவன் மேலே எழும்பினன். வீர நரசிம்மனின் கட்டளைக்காகக் காத்திருந்தனர் கன்னட நாட்டு வீரர்கள். சுந்தரபாண்டியனின் கட்டளைக்காகக் காத்திருந்தனர் பாண்டிய வீரர்கள்.

அரசர்கள் இருவரும் தங்கள் தங்களது யானைகளின் மீது ஏறி அமர்ந்து கொண்டார்கள். முதன் முதலில் அரசும் அரசும் மோதியவுடன், அவர்களைத் தொடர்ந்து படையும் படையும் மோதுவது போரில் ஒரு வகைப் பழக்கம். இந்தப் போரில் அந்த முறையே கையாளப்படுகிறது என்பதைக் கண்ட படைத் தலைவர்கள் அதற்கேற்றவாறு அணிகளை அமைத்திருந்தார்கள்.

காவேரியாற்றின் மையத்தில் பரவலானதோர் மணற்பரப்புக் காணப்பட்டது. இரு கரைகளின் அருகேயும் அந்த இடத்தில் பரவலாக முழங்கால் அளவே நீர் ஓடியது. முன்னணியிலிருந்த யானைகள் இரண்டும் ஆற்றைக் கடந்து நடுத் திட்டுக்குச் செல்லச் சித்தமாகி விட்டன. தொலைதூரத்தில் நேருக்கு நேர் நின்ற இருவருக்கும் மற்றவர்களின் யானைகள் தெரிந்தனவே தவிர, அவர்களின் உருவங்கள் தெரியவில்லை.

குபீரென்று பல்வகை ஒலிகளும் ஒரே சமயத்தில் எழுந்து மயிர்க்கூச்செறிய வைத்தன. மதுவுண்டு மதங்கொண்ட களிறுகள் இரண்டும் காவேரியில் பாய்ந்து நீரைக் கலக்கிச் சேருக்கி முன்னே வந்தன. மெய்காற்றுப் போர் புரியும் உடன் கூட்டமும் அரசர்களைப் புரவிகளில் பின்பற்றியது.

திடீரென்று இரட்டைச் சங்குகள் மட்டிலும் இடையில் வேறொரு திசையிலிருந்து ஒலித்தன. எங்கிருந்து வந்தன என்று தெரியாதபடி மேற்குத் திசையிலிருந்து, நட்டாற்றைக் கிழித்தபடி இரு வெண் புரவிகள் பறந்து வந்தன.

இருபுறத்து அரசர்களும் அதிர்ச்சியுற்றார்கள். இருபுறத்துப் படையினரும் மெய் விதிர்த்தார்கள்.

மீனக்கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது ஒரு குதிரையிலிருந்து. புலித்தலைக் கொடி பட்டொளி வீசிப் பறந்து கொண்டிருந்தது மற்றொரு புரவியிலிருந்து. இரண்டு குதிரைகளுமே இணைந்து பறந்தன.

போர்க்களத்தின் கொலை வெறியையும் மறந்து, ''கயல்விழி அம்மையார்! கயல்விழி அம்மையார்!'' என்று குதூகலத்துடன் ஆரவாரம் செய்தார்கள், பாண்டிய நாட்டு வீரர்கள்.

அதே போன்று, ''நம்முடைய இளவரசி! இளவரசி பாமினி தேவியார்!'' என்று எக்காளமிட்டார்கள் கன்னடத்து வீரர்கள்.

கயல்விழியை அந்தக் கோலத்தில் கண்டவுடன் யானையின்மீது வீற்றிருந்த சுந்தரபாண்டியனின் தேகம் முழுதும் நடுங்கியது. அவனுடைய யானை மீது வந்து மோதப் போகிறவன் போல் அவள் தன் குதிரையை விரட்டிக் கொண்டு வந்தாள். பாமினியும் அவ்வாறே தன் தந்தையின் யானையை நோக்கிச் சென்ருள்.

பின்னால்வந்த மெய்க்காவல் வீரர்கள் சட்டென்று நின்று விட்டார்கள்.

குதிரையைக் கொண்டுவந்து சுந்தர பாண்டியனுக்கு முன்னால் நிறுத்திக் கொண்டு, ''அரசே!'' என்று பாண்டியனைக் கூவி அழைத்தாள் கயல் விழி: ''போர் தொடங்குவதற்கு முன்பாகப் போரின் வெற்றிக்காகக் களப்பலி கொடுப்பது நம்முடைய பழைய மரபல்லவா?'' என்று கேட்டாள்.

வெறி கொண்டு பாய்ந்த யானையை அடக்கி நிறுத்துவதற்கு அரும்பாடு பட்டான் யானைப் பாகன். சுந்தர பாண்டியனின் வாயடைத்துவிட்டது. கயல்விழியே தொடர்ந்து பேசினாள்.

''பாண்டிய நாட்டின் சார்பில் நான் என்னைக் களபலி கொடுக்க இங்கு வந்திருக்கிறேன். என்னை முதலில் உங்களுடைய போர் வெறிக்குப் பலிகொடுத்து விட்டு, அடுத்தாற்போல் உங்கள் வீரர்களையும் குடிமக்களையும் பலி கொடுங்கள். பிறகு நீங்கள் மயான பூமியாகச் சுட்டெரிக்கப்பட்ட நாட்டில் உங்கள் வெற்றி விழாவைக் கொண்டாடலாம்!''

''கயல்விழி!'' என்று கத்தினான் இளையபாண்டியன்.

''பாமினியை அவளுடைய தந்தையார் அவருடைய வெற்றிக்காகப் பலி கொடுப்பார். நீங்கள் உங்கள் வெற்றிக்காக என்னைப் பலி கொடுங்கள்!''

மதங் கொண்ட யானையை எதிர்த்துப் போராட ஓடி வருபவள் போல் தன் குதிரையிலிருந்து தாவிக் குதித்து வந்தாள் கயல்விழி. போர் வெறியால் கிறங்கியிருந்த தலைவனைப் போலவே அவன் யானையும் கள்ளுண்டு மதங் கொண்டிருந்தது. ஓடி வந்தவளைச் சட்டென்று திரும்பித் தன் துதிக்கையால் வளைத்துப் பிடித்தது; சீற்றத்துடன் காலில் போட்டுத் துவைக்க மேலே தூக்கியது. **(அடுத்த இதழில் முடியும்)**

## உங்கள் வதனம் இயற்கைப்பொலிவுடன் எழிலாய் விளங்க
## பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர்

பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் உபயோகித்தால் உங்கள் வதனப்பொலிவு இயற்கை எழிலோடு வசீகரமாய் விளங்கும். இது திட்டுத்திட்டாகத் தெரியாமல் ஒரே சீராகப் படிந்து முகத்திலுள்ள மாசு மறுக்களை மறைத்து விடுகிறது. பாண்ட்ஸ் ட்ரீம்ஃப்ளவர் ஃபேஸ் பவுடர் பல இளம் நிறங்களில் கிடைக்கிறது. இது உங்கள் முக சருமத்தை மினுமினுப்பாக்கி நீடித்த நேரம் கவர்ச்சியுடனிருக்கச் செய்யும்.




## பாண்ட்ஸ்
ட்ரீம்ஃப்ளவர்
ஃபேஸ் பவுடர்

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ. யில் இணைக்கப்பட்டது)

அத்தியாயம் பதினுன்கு

## விதியின் சிரிப்பு

"சேப்மாறிப் பசங்க! ஏமாந்தா, உங்களைக் கூடக் கோணியிலே கட்டித் தூக்கிக்கிட்டுப் போய்க் காயலான் கடையிலே வித்துப்பிட்டு, 'சல்பேட்டா' வாங்கிக் குடிச்சுடுவானுங்க, சார்! அந்த மாதிரி ஊரு இது!" என்றுன் நச்சி அச்சக முதலாளியிடம்.

அச்சக ஆட்கள் இருவர் ஒரு பெரிய கோணி நிறைய காகித ஜல்லிகளை அடைத்துக் கட்டித் தூக்கிக் கொண்டு வந்து ஆபீஸ் அறையில் வைத்து, அதன் எடை விவரத்தை முதலாளியிடம் சொல்லிவிட்டுப் போனுர்கள்.

"சார்!....." என்று முழங்கையைச் சொறிந்தபடியே முதலாளியின் அருகில் நெருங்கினுன் நச்சி. "இப்பப் பையன் கிட்டே இதுக்குப் பணம் இல்லை. பலான வேஸ்ட் பேப்பர் கம்பெனியிலே கொண்டு போய்ப் போட்டப்புறம் கிடைக்கிற பணத்தில் உங்களுக்குச் சேர வேண்டிய தொகையைக் கொண்டு வந்து கொடுத்துவிடுவான். என்னை நம்பி அவனுக்கு இந்த உதவியைச் செய்யுங்க, சார்!"

"பரவாயில்லை. அவனையே நம்புகிறேன். எடுத்துக்கொண்டு போகட்டும்" என்று சொன்ன கண்ணபிரான், சபேசனை நிமிர்ந்து பார்த்து, "தம்பி! இங்கே மேசைக்கெதிரில் மின்சார விசிறியின் 'குளுகுளு' காற்றிலே உட்கார்ந்து கொண்டிருக்கிறேன் என்று என்னைப் பெரிதாக நினைத்து விடாதே! நானும் ஒரு காலத்தில் பேப்பர் ஜல்லி வாங்கி விற்றுப் பிழைத்தவன்தான். அதிலிருந்து படிப்படியாக முன்னேறியே இந்த அச்சகத்தை நிறுவி நடத்தி வருகிறேன். இப்பவும் நான் பொருளாதா



ஜெகசிற்பியன்




ரத்தில் அப்படியொன்றும் உயர்ந்துவிடவில்லை. இன்றைக்கு டெலிபோன் பில் கட்டாவிட்டால் தொடர்பைத் துண்டித்துவிடுவார்கள்; இங்கு வேலை செய்யும் பீஸ் கம்பாஸிட்டர்களுக்குச் சாயந்திரம் கூலியைப் பட்டுவாடா செய்யவில்லையென்றால் தெருவிலே நின்று என்னைத் திட்டுவார்கள். இதற்கெல்லாம் நீ கொண்டு வந்து கொடுக்கப் போகும் இந்த ஜல்லிப் பணத்தைத்தான் நம்பிக் கொண்டிருக்கிறேன். சரி, போகலாம்'' என்றவாறு தம் வேலையில் கவனம் செலுத்தினார்.

''ஐயா சொன்னதைக் கேட்டுக்கிட்டியா, தம்பி?'' என்று பின்பாட்டுப் பாடிய நச்சி அந்தப் பெரிய ஜல்லி மூட்டையைத் தூக்கிச் சபேசனின் தலைமேல் வைத்துவிட்டு, அச்சக முதலாளியிடம் விடை பெற்றுக் கொண்டு வெளியே வந்தான்.

சுமக்க முடியாத சுமையாக இருந்த அந்தப் பேப்பர் ஜல்லி மூட்டையைச் சுமந்து கொண்டு வெளியில் வந்த சபேசன் அதை என்ன செய்வது என்ற

விவரம் தெரியாமல் நச்சியைப் பேந்தப் பேந்தப் பார்த்து விழித்தான்.

''இன்னு பிரதர்! இந்த ஜல்லி மூட்டையை இப்ப என்ன பண்ணப் போறே?'' என்று கேட்டுவிட்டுப் பெரிதாக நகைத்த நச்சி, ''பயப்படாதே! நாம் வருகிறபோது கொத்தவால் சாவடியண்டை ஒரு வேஸ்ட் பேப்பர் கம்பெனியைக் காட்டி அதை ஞாபகம் வைச்சுக்கோன்னு சொன்னேன் இல்லேயா? அந்தக் கம்பெனிக்கு எடுத்துக் கிட்டுப் போ; வாங்கிக்குவாங்க! இப்ப ஒரு கிலோ ஜல்லி முப்பது பைசாவோ என்னவோ, சரியாத் தெரியலே. அவங்க வாயாலேயே நைஸாகக் கேட்டுத் தெரிஞ்சுக்க. இன்னொரு விஷயத்தையும் சொல்லி வைக்கிறேன்: சரக்குப் புடிக்கிற இடத்திலே நடந்துக்கிட்டாப்பலே அதை விக்கிற இடத்திலேயும் நடந்துக்கப்படாது; இங்கே கூழைக் கும்பிடு போடணும்; அங்கே தெனவுட்டா பேசித் தெகிரியமா வியாபாரம் பண்ணனும். இல்லேன்னு தலையை மொட்டையடிச்சு அனுப்பி விடுவாங்க. அப்புறம் ஒரு விஷயம்: இங்கே இன்னைக்கு ஜல்லி புடிச்சே, நாளைக்கு இன்னு பண்ணுவே? இன்னோர் அச்சாபீசிலே போய்க் கேட்கணும். அங்கே இல்லேன்னு இன்னொண்ணு. இப்படித் தெருத் தெருவா ரவுண்ட் அடிச்சுக்கிட்டே இருக்கணும். இந்தப் பட்டணத்தில் அச்சாபீஸ்களுக்குக் குறைச்சலே இல்லே. தினத்துக்கும் சரக்குப் புடிக்கலாம்; சரி; புறப்படு ராஜா! சிங்கக் குட்டி மாதிரி பூந்து ஜமாய்ச்சுத் தன்னு, போ!'' என்று அலட்சியமாகக் கூறி ஒரு கோணல் சிரிப்புச் சிரித்துக் கொண்டே தன் எண்ணெய் வண்டியை இழுத்துக்கொண்டுபுறப்பட்டுவிட்டான்.

சபேசனின் மனம் நன்றி உணர்ச்சியால் உருகித் தளதளத்தது. 'நல்ல இதயங்களை இறைவன் எங்கெல்லாம் வீசிப் போட்டு வைத்திருக்கிறான்!' என்று விநய வியப்புடன் எண்ணிக் கொண்டே அங்கிருந்து கிளம்பினான்.

**அ**ன்று ஞாயிற்றுக் கிழமை. விடுமுறை தினமானதால் சபேசனும் கட்டாய ஓய்வை மேற்கொள்ள வேண்டியவனானான்.

அதிகாலையில் எழுந்ததும் மாதவன் நாயருக்கு வழக்கமாகச் செய்யும் சிறு சிறு வேலைகளைச் செய்து கொடுத்து விட்டு, அந்த வேலியோரக் குழாயில் நன்றாகக் குளித்து, துணிகளைத் துவைத்துக் காயப் போட்டான். பிறகு அவை உலரும் வரையில் வெறும் கோவணத்தோடு ஒரு மரத்தடியில் மறைந்து உட்கார்ந்திருந்த அவன், ஆடைகள் உலர்ந்ததும் உடுத்துக்கொண்டு நேரே துறைமுகத்துக்குப் போனான். 'பர்மா அகதிகளை ஏற்றி வரும் இரண்டாவது கப்பல் வந்து விட்டதா?' என விசாரித்தான். 'அது வர இன்னும் சில தினங்கள் ஆகலாம்' என்ற தகவல் கிடைத்தது. தன் தந்தையைப்பற்றிய துயரத்தில் ஆழ்ந்தவனாய் அங்கேயே பகல் போதுவரையில் பைத்தியக்காரனைப்போல் சுற்றிக் கொண்டிருந்து விட்டுத் திரும்பி, ஒரு ஹோட்டலுக்குப் போய் வயிராரச் சாப்பிட்டதும் அவனுடைய துயரச் சுமை ஒருவாறு இறங்கியது.

பிராட்வே லோன்ஸ்கொயர் பார்க்குக்கு வந்து சோர்வுடன் ஒரு பெஞ்சில் உட்கார்ந்தான். காகித ஜல்லி வியாபாரத்தில் அவனை ஈடுபடுத்திவிட்டுப் போன நச்சி, கடந்த ஐந்து தினங்களாகக் கண்ணில் தென்படவே இல்லை. அவனைக் காணவேண்டும் என்ற ஆவல் சபேசனின் மனத்தில் மலையாக உயர்ந்து வளர்ந்துகொண்டே இருந்தது. ஆனால் அவனாக வந்து இவனைக் காணாத வரையில் இவன் அவனைக் கண்டுபிடித்துவிட முடியுமா என்ன?

தான் செய்யத் தொடங்கியிருக்கும் புதுத் தொழிலைப் பற்றிய சிந்தனையில் தன் மனத்தைத் திருப்பி விட்டான் சபேசன். சந்தேகமின்றியில் அது ஓர் இலாபகரமான தொழில்தான் என்று அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. முதல் நாள் விற்றதில் அச்சக முதலாளிக்குத் திருப்பிக் கொடுத்த தொகை போக, ஐந்து ரூபாய் லாபம் கிடைத்தது. அதையே முதலாக்கி மறுநாள் ஜல்லி வாங்கி விற்றதில் இரண்டு ரூபாய் லாபம். இப்படியே சென்ற ஐந்து தினங்களில் செய்த ஜல்லி வியாபாரத்தில் அவனுடைய சாப்பாட்டுச் செலவு நீங்கலாக இப்போது பதினேழு ரூபாய் மிச்சமிருக்கிறது. இதில் மீண்டும் ஜல்லி கொள்முதல் செய்யப் பத்து ரூபாயை எடுத்து வைத்துவிட்டாலும் கையாக ஏழு ரூபாய் இலாபம் இருப்பில் . தங்கும்.

இதையெல்லாம் நினைத்த போது அவன் மனம் மகிழ்ச்சியால் பூரித்தது. தனக்கு இப்படி ஒரு நல்ல தொழிலைக் காட்டிவிட்ட நச்சிக்குத் தன் நன்றியை எவ்விதமாகக் காட்டுவதென்றே அவனுக்குத் தோன்றவில்லை. பக்தி பூர்வமாக அவனைத் தியானிப்பவன்போல் அவனது பெயரைத் திரும்பத் திரும்ப வாய்விட்டுச் சொல்லிக்கொண்டான்.

சென்னை நகரில் உள்ள வேலையற்றோர்களுக்கும், சமூக விரோதமான




"நாய் ஜாக்கிரதைங்கற போர்டை எடுத்துவிட்டாலே தேவலை. யாரும் எதுவும் கிட்டே நாடறதே இல்லை. எனக்கும் படுத்துத் தூங்கித் தூங்கி உடம்பு சோம்பலாயிட்டது!"

காரியங்களில் துணிந்து இறங்குவோருக்கும், சோம்பேறிகளுக்கும், பெரு நோயாளிகளுக்கும் அந்த லோன்ஸ் கொயர் பார்க்குத்தான் 'சொர்க்கப் பூங்கா' என்ற விஷயம் சபேசனுக்குத் தெரியாது. அவன் உட்கார்ந்திருந்த இடத்துக்குப் பக்கத்திலேயே சிலர் 'வை ராஜா, வை' சூதாட்டத்தில் வெகு மும்முரமாக ஈடுபட்டிருந்தனர். மற்றும் சிலர் அலங்கோலமாகத் தூங்கிக் கொண்டிருந்தனர். அது பகல் நேரம் என்பதையும் மறந்து போன நடைபாதை வாசிக் காதல் ஜோடிகளும் அங்கே குறைவில்லாமல் காணப்பட்டனர். சும்மா யிருப்பதில் சுகம் கண்ட சில கைவண்டிக்காரர்கள் கும்பல் கும்பலாக உட்கார்ந்து அருவருப்பான பாஷையில் உள்ளூர் அரசியலைப் பற்றியும் பேசிக்கொண்டிருந்தனர்.

இதையெல்லாம் பார்த்த சபேசனுக்கு அங்கு உட்கார்ந்திருக்கப் பிடிக்கவில்லை. பணம் இருக்கும் தன் ஜேபியை அடிக்கடி தொட்டுப் பார்த்துக்கொண்டான். இதை எப்படியோ கவனித்துவிட்ட இரண்டு போக்கிரிகள் அவனைச் சுற்றி வட்டமிட ஆரம்பித்தார்கள். திகிலடைந்த சபேசன் அங்கிருந்து எழுந்துவிட்டான்.

எங்கெங்கோ சுற்றியலைந்த பின் மாலைப்போது ஒருவாறு கழிந்து சாலை விளக்குகள் எரியத் தொடங்கின. ஹோட்டலொன்றில் இரவு உணவை முடித்துக் கொண்டு வெளியே வந்த அவனுக்குத் திடீரென்று ஒரு பயம் தோன்றியது. மண்ரோ சிலையடியில் தனியாகப் படுத்துத் தூங்கும்போது யாராவது தன் ஜேபியில் உள்ள பணத்தைத் தேட்டை போட்டுக் கொண்டு போய்விடுவார்களோ என்ற பயம்தான் அது. தீவிர யோசனைக்குப் பின் அவனுக்கு ஒரு யுக்தி புலப்பட்டது.

சாலையோரமிருந்த ஒரு மரத்தடியில் போய் மறைந்து நின்றுகொண்டு, தன் சட்டையின் மார்புப் பகுதிக்கு நேரே — பித்தான் போடுவதற்கென இரட்டை மடிப்பில் பட்டையாகத் தைக்கப்பட்டிருந்த இடத்தில் — குறுக்கு வசத்திலே துணியின் மேல் பாகத்தை மட்டும் சிறிதே கிழித்து விட்டான். இதனால் இரு விரல்களை நுழைக்கும் அளவுக்கு ஒரு சிறு பைபோல் அது ஆகியது. ஜேபியில் இருந்த ரூபாய் நோட்டுகளை எடுத்து நீளமாக மடித்து அந்தப் பையில் தள்ளித் திணித்தான். அவனுடைய கடின உழைப்பால் சம்பாதித்த பணம் முழுதும் இப்போது அவன் நெஞ்சுக்குக் கீழே வெகு பத்திரமாகப் படிந்து பதுங்கி விட்டது!

வெற்றிச் சிரிப்புடன் சாலைக்கு வந்து மாதவன் நாயர் டீக்கடையை நோக்கி உற்சாகமாக நடந்தான் சபேசன். அங்கே அவனுக்காக ஒரு பேரிடி காத்துக் கொண்டிருந்தது.

ஆமாம்; அந்த டீக்கடை சாத்திக் கிடந்தது! அவ்வழியாக வந்த ஒரு ரிக்ஷாக்காரனிடம் மெல்லப் பேச்சுக் கொடுத்து விசாரித்தான்.

"நாயரையா கேக்கறே, நைனா? ஆங், படா கில்லாடியாச்சே அவன்! இத்தினி நாளும் டீ விக்கிற சாக்கிலே சாராயம் வித்துக்கினு இருந்தானாம்; போலீஸ்காரங்க அதை எப்படியோ கண்டு பிடிச்ச ஆளைத் தள்ளிக்கினு போயிட்டாங்க!"

சபேசனுக்குத் தலை சுற்றியது. பயத்தால் உடல் நடுங்கியது. இன்றிரவு எங்கே படுப்பது என்ற கவலை அவனைப் பேயாகப் பிடித்து உலுக்கியது.

இத்தனை நாட்கள் தனக்கு நித்திரை சுகம் தந்த மண்ரோ சிலையின் வட்ட மேடையை ஏக்கத்துடன் பார்த்தவாறு அதைச் சுற்றிச் சுற்றி வந்தான். மாதவன் நாயரின் பாதுகாப்பின்றி அவ்விடத்தில் தனியாகப் படுக்க அவனுக்குத் தைரியம் இல்லை. அப்படிப் படுத்தால் இரவு வேளையில் ரோந்து வரும் போலீஸாரிடம் என்ன பதில் கூற முடியும்? அந்த டீக்கடையில் வேலை செய்வதாகச் சொன்னால், அவனும் நாயரோடு சேர்ந்து கள்ளச் சாராய விற்பனையில் ஈடுபட்டவனு

# கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலை உபயோகித்து உங்கள் கேசத்திற்குப் போஷாக்கையும்






## நறுமணத்தையும் அழகையும அளியுங்கள்...

புதிய கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலை தினந்தோறும் தேய்த்துக் கொள்வதனால், உங்கள் மயிர்க்கால்கள் புத்துயிர் பெற்று, அபரிமிதமான, நீண்ட கேசவளர்ச்சிக்கு உதவுகிறது; தெளி தெளிவான கேசத்தின் இயற்கை அழகை வெளிப்படுத்துகிறது...உங்களுக்குப் பிடித்தமான கேச அலங்கரிப்பை எடுத்துக் காட்டுகிறது. **அழகிய கேசத்தைப் பெற, கால்கேட் பெர்பியூம்டு கோகோனட் ஹேர் ஆயிலை உபயோகியுங்கள்.**



உங்கள் கேசத்தின் உண்மை அழகை
வெளிப்படுத்த உதவுவதும், குடும்பத்தினர்
விரும்பும் நறுமணத்துடனும் கூடிய
**கால்கேட் காஸ்டர் ஹேர் ஆயிலின்**
ஒரு உன்னதமான துணைத்தயாரிப்பு.

COHQ.G.3. TAM.

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்... இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**

புதிய, நவீன காஸ்மெடிக் டின்!







மற்றும் கிடைக்கும் பாமாலிவ் டால்க் வகைகள்—
மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

PT.G.7 TAM.

யிருப்பாளே என்று அவர்கள் சந்தேகிக்கலாம் அல்லவா ?

இரவு மணி பத்து என்பதை ரிப்பன் மாளிகைக் கடிகாரமும், சென்ட்ரல் ஸ்டேஷன் கடிகாரமும் ஒன்றன்பின் ஒன்ருக அறிவித்து விட்டு ஓய்ந்தன. இதற்கு மேலும் அங்கு நிற்க அஞ்சிய சபேசன், கண் கலங்கி, மனம் குழம்பி நடக்க ஆரம்பித்தான்.

'இந்தப் பட்டணத்திலே ராத்திரி வேளையில் கண்ட கண்ட இடத்திலெல்லாம் படுக்கக் கூடாது, தம்பி! போலீஸ்காரங்க பார்த்தா செவன்ட்டிஃபோர்லே தள்ளிக்கிட்டுப் போயிடுவாங்க!'

அன்ெருரு நாள் நச்சி சொன்ன இவ்வெச்சரிக்கை மொழிகள் அவனை எங்கும் நிற்க விடாமல் நடத்திக் கொண்டே யிருந்தன.

பகல் வேளையில் படாடோபமாகவும், அசுர உற்சாகத்தோடும், பிரமிக்கத் தக்க கோலாகலத்துடனும் இயக்கமிட்டுக் காணப்படும் சென்னை மாநகரம், இரவு வேளையில் அநாகரிகத்தின் சகல அருவருப்புகளுடனும் அழுகிச் சிதைந்த பிணம் போல் காட்சியளிப்பதைக் கண்டு திகில் அடைந்தவனுய், படுக்க வேண்டும் என்ற எண்ணமே இல்லாமல் நடந்து கொண்டிருந்தான் அவன்.

நச்சி சொன்னது போல் அப்படியொன்றும் அந்தச் சட்ட விதி நகரில் அநுசரிக்கப்படுவதாகத் தோன்றவில்லை. நடைபாதைகளிலும், மரத்தடிகளிலும், சாத்திக் கிடந்த கடைகளின் வாயிற்படிகளிலும் ஜனங்கள் படுத்துத் தூங்கிக் கொண்டுதான் இருந்தார்கள். சில இடங்களில் குடும்பம் குடும்பமாகக்கூடத் தூக்கத்தில் ஆழ்ந்திருப்பது தெரிந்தது. இதையெல்லாம் பார்த்துக்கொண்டு வந்த சபேசன் தானும் போய் அவர்களில் ஒருவனுகப் படுத்து விடலாமா என்று நினைத்தான். ஆனல், மறு கணமே அந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டு விட்டான். காரணம், அவர்களெல்லாம் என்னென்ன ஏற்பாடுகளுடன் எவரெவரது பாதுகாப்பும் சிபாரிசும் பெற்று அந்த இடங்களில் தூங்குகிருர்களோ! அல்லது பரம்பரை பரம்பரையாகவே அவர்கள் அந்த 'உரிமை'யை நிலை நாட்டிக் கொண்டவர்களாக இருக்கலாம்; அல்லது செய்வதைச் செய்து விட்டுப் பெறுவதைப் பெற்றுக் கொள்ளத் துணிந்தவர்களாகவும் இருக்கலாம். ஒருகால் அந்தச் சட்ட விதியே அவர்கள் விஷயத்தில் சலிப்படைந்து பாராமுகமாய்ப் போனாலும் போய் விட்டிருக்கலாம். எனவே, இப்படிப்பட்டவர்களுடன் அவனும் ஒருவனுகச் சேர்ந்து நடைபாதையிலோ, மரத்தடியிலோ, வியாபார ஸ்தலங்களின் வாயிற்படியிலோ படுத்து உறங்கிவிட முடியாது அல்லவா ?

சபேசன் நடந்துகொண்டிருந்தான். இடமோ பெயரோ தெரியாத வட்டாரங்களிலெல்லாம், ரோடுகளிலெல்லாம், தெருக்களிலெல்லாம், சந்து பொந்துகளிலெல்லாம் அவன் நடந்து கொண்டே யிருந்தான். தூக்கம் கண்ணைச் சுற்றியது. உடல் சோர்ந்து கால்கள் தள்ளாடின. ஆயினும் இப்படியே நடந்து நடந்து இன்றிரவு முழுப் பொழுதையும் கடத்தி விடுவது என்ற முடிவுடன் நடந்துகொண்டிருந்தான் அவன்.

பொழுது புலர்ந்தது. சவமாகக் கிடந்த சென்னை நகரம் புத்துயிர் பெற்று எழுந்தது. தொய்ந்து துவண்ட நிலையில், மாதவன் நாயரின் கடைக்கருகிலேயே வந்து ஒரு மரத்தடியில் படுத்து விட்டான் சபேசன்.

இப்போது எந்தச் சட்டமும் எதுவும் செய்ய முடியாது. அன்றைய பகல்போது அவனுக்கு இனிய இரவாகியது !

முற்பகலும் பிற்பகலும் கரைந்த விதமே தெரியாமல் ஆனந்த நித்திரையில் ஆழ்ந்து கிடந்த சபேசன் மாலை நேரத்துக் குளிர்ந்த காற்றின் வருடலால் மெல்லக் கண்விழித்து எழுந்தான்.

எழுந்ததுமே அவன் மனத்தில் மீண்டும் அந்தப் பழைய கவலைகள் முட்டித் தலைதூக்கின: 'இன்றிரவை எங்கே கழிப்பது? நேற்றுப் போல் ஊரைச் சுற்றி வரவேண்டியதுதாஞ? இன்றைய பகல் பொழுதையெல்லாம் தூங்கியே கழித்து விட்டதால் ஜல்லி விற்பனை செய்ய முடியாமலாகி, அதனுல் கிடைத்திருக்கக் கூடிய நாலைந்து ரூபாய் வருமானம் நழுவிப் போய் விட்டது. ஒவ்வொரு நாளும் இதே மாதிரி வீணுகிப் போனல், கையிலிருக்கும் பணமெல்லாம் செலவாகி, அப்புறம் பட்டினி கிடக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டு விடுமே!'

அவனுக்குப் பசி வயிற்றை முறுக்கியது. வேலியோரத்துக் குழாயில் பல் துலக்கி முகத்தைக் கழுவிக்கொண்டு எங்காவது ஹோட்டலுக்குப் போய்ச் சாப்பிடலாம் என்ற முடிவுடன் அங்கிருந்து செல்லக் காலெடுத்த போது, ''இன்ன, பிரதர் ! நாலஞ்சு நாளைக் குள்ளாகவே மெட்ருஸ் தண்ணி ஊறிப்

போச்சா?'' என்ற குரல் கேட்டுச் சட்டென்று திரும்பினான்.

சாத்திக் கிடந்த டீக் கடையின் மேல் சிகரெட் குடித்தவாறு உட்கார்ந்திருந்த நச்சிதான் இப்படி அலட்சியமாகக் கேட்டு விட்டுச் சிரித்தான்.

சபேசனுக்கு ஒரே மகிழ்ச்சி! தன் கவலைகளைப் போக்கத் தெய்வமே தரிசனம் தந்து விட்டாற் போன்ற குதூகலத்துடன் அவனை நோக்கி ஓடினான்.



''இவர்தான் புண்யகோடி எம். பி. இவர் தனகோடி ஐ. பி.''

சட்டென்று கண்களைத் துடைத்துக் கொண்டு அவனைப் பரிதாபமாக ஏறிட்டு நோக்கினான் சபேசன்.

''அது போகட்டும்; ஜவ்வி வியாபாரமெல்லாம் எப்படி இருக்குது? அதைச் சொல்லு!''

சபேசனுக்கு இப்போது தான் சற்றுத் தெம்பும் தைரியமும் ஏற்பட்டன. தன்னுடைய ஐந்து நாள் தொழில் அநுபவங்களையும் அதில் கிடைத்த இலாபக் கணக்குகளையும் உற்சாகமாகச் சொல்லி விட்டு, இன்று வீணாக ஒரு பொழுதைக் கழிக்க நேர்ந்தது பற்றி மீண்டும் வருத்தப்படலானான்.

''ஜவ்வி வித்ததிலே நாலு காசு கிடைச்சுட்டாப்பலே இருக்குது: அதான் துரை பட்டம்பகலிலேயே சொகம்மா படுத்துத் தூங்க ஆரம்பிச்சுட்டாரு!''

''இல்லை, அண்ணே! அப்படியெல்லாம் இல்லை!'' என்று அழுகை தொண்டையடைக்கக் கூறிய சபேசன், நேற்று நாயருக்கு நேர்ந்த கதியையும் அதனால் படுக்க இடமின்றித் தான் பட்ட துன்பங்களையும் அவனிடம் விளக்கிச் சொல்லி விட்டு, அந்தத் துயரத்தைத் தாளமாட்டாதவனாய்த் தேம்பியழுதவாறு தலைகுனிந்தான்.

இப்போதுதான் விஷயம் புரிந்தாற் போல் அவனை வெறித்துப் பார்த்தான் நச்சி. உள்ளூற மிகவும் வேதனைப்படுகிறான் என்பது கறுத்துச் சிறுத்த அவன் முகத்திலிருந்து தெரிந்தது. ''அடங்க, இஸ்கி! இந்த நாயர் என்னமோ சக்கரை கிக்கரை வாங்கக் கடையைச் சாத்திப் பிட்டுப் போயிருப்பானுல்லே நினைச்சுக் கிட்டு இருக்கிறேன்! ஆளு 'அம்பேல்' ஆயிட்டானா? சரிதான்!'' என்று ஒரு கோணல் சிரிப்புடன் கூறிக்கொண்டே சபேசனிடம் வந்து அவனுடைய முகத்தை உற்றுப் பார்த்து விட்டு, ''சீச்சீ! இன்னா தம்பி, இதுக்கெல்லாமா இப்படி அழுவறது? இந்த அழுமூஞ்சித்தனம் மட்டும் எனக்கு ஆவாதுன்னு அப்பவே சொல்லியிருக்கேன் இல்லே? யாராவது ஆயிரம் ரூபா சும்மா கொடுக்கிறேன்னு சொல்லி அழச் சொன்னாக்கூட அழக் கூடாது. அது ரொம்ப அசிங்கம். நம்ம சினிமாப் படங்களிலே எதுக்கெடுத்தாலும் கதறிக் கதறி அழுவானுங்க; அதைப் பார்க்கிறப்ப எனக்குக் காறித் துப்பணும் போல இருக்கும். மீசை முளைச்ச ஆம்பிளை அழுவறதாவது!—வெட்கமில்லே?'' என்றான்.

''அட, யார்ரூவன்! சுத்த அழுவலாயிருக்கிறான்! இதோ பார், தம்பி! இந்தச் சிகரெட்டைக் குடிக்கிறேன். இது எதுக்காக? இதிலே என்னமோ சுகமும் சுரத்தும் இருக்குதுன்னுதான் குடிக்கிறேன் இல்லையா? இப்படிக் குடிக்கும்போது எப்பவாச்சும் ஒரு தபா சாம்பல்தூள் கண்ணிலே விழுந்துடுத்து. அப்ப கண்ணு என்னமா எரிச்சலெடுக்குது தெரியுமா? 'சீ, இனிமேல் இந்தக் கயிலாத்தைக் கையிலேயே தொடப்படாது'ன்னுகூடத் தோணுது. ஆனால் அந்த வெறுப்பும் சலிப்பும் கொஞ்ச நேரந்தான். மறுபடியும் கை, சிகரெட் பாக்கெட்டை ஜோபியிலே தேடிக்கிட்டுப் போவுது. இப்படித்தான் வாழ்க்கையிலே அப்பப்ப கஷ்ட நஷ்டம் வந்துகிட்டிருக்கும்; அதையெல்லாம் பார்த்து ஜகா வாங்கலாமா? ஒண்ணொண்ணுக்கும் பயந்து 'பேக்'கடிச்சுக்கிட்டே போனால் அப்புறம் எங்கேதான் போய் நிற்கிறதாம்? வாழறதிலே ஏதோ பெரிய சுகம் இருக்குதுன்னு நல்லா தெரிஞ்சு தானே நாம் வாழ ஆசைப்படறோம்? அந்த ஆசையைச் சும்மா எறும்புக்கடிக்கும் முள் குத்தலுக்கும் பயந்து உதறிப் போடலாமா? என்னமோ படிச்சவன்னு சொல்றே, இந்தச் சின்ன விஷயம்கூட உனக்குத் தெரியலேயே!'' என்று அலட்சியமாகக் கூறிச் சிரித்த நச்சி, சபேசனின் தோள் மீது கைபோட்டு அழைத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டான்.

அவன் கைகால் முகமெல்லாம் திட்டுத் திட்டாகப் பச்சை வர்ணம் படிந்து கிடந்தது. இன்று எங்காவது பெயிண்ட் அடிக்கும் வேலை செய்து விட்டு வந்திருக்கிறான் போலும்!

(தொடரும்)

ஒரு கிளாஸ்

# கிஸான்

ஸ்க்வாஷ் அருந்தி

இளேப்பாறுங்கள்

அது சிறந்ததொரு
பழ ரசமாகும்




சுவை மிக்கது; அலுப்பு நீக்குவது; ஆரோக்கியமானது. தானே கனிந்த கனிகளிலிருந்து தயாரானது. வைட்டமின் சத்து நிறைந்தது. கிஸான் ஸ்க்வாஷ் ஆரஞ்சு, லெமன், மற்றும் ஆறு ரகங்களில் கிடைக்கிறது.

மற்ற எந்தத்
தயாரிப்பையும் விட
கிஸான் ஸ்க்வாஷ்கள்தான்
இந்தியாவில் அதிகமாக
விற்பனையாகின்றன

கிஸான் பிராடக்ட்ஸ் லிமிடெட் பெங்களூர்



# கந்தன் கருணை

## 22. விண்ணவர்கோன் மண்ணுலகேகினான்!

சூரபன்மன் இந்திரஞாலத் தேர் மீது ஏறி நாடோறும் ஆயிரத்தெட்டு அண்டங்களிலும் சென்று அரசு செய்து கொண்டிருந்தான். ஒரு நாள் அவன் பாதாளத்தில் இருப்பான்; ஒரு நாள் விண்ணுலகத்தில் இருப்பான்; ஒருநாள் சத்தியலோகத்தில் இருப்பான்; ஒரு நாள் வைகுந்தத்தில் இருப்பான். இவ்வாறாகப் பகல் முழுவதும் வெளிச் சென்று மாலையில் வீரமகேந்திரபுரிக்குத் திரும்புவான் சூரபன்மன்.

அதிகார வெறியோடு காம வெறியும் மிகுந்தது. தன்னை யாரும் எதுவும் செய்ய முடியாது என்ற எண்ணத்தில் மனம் போனபடி செல்ல விரும்பினான். பாவம் புரிந்தால் விடையிறுத்தே தீர வேண்டும் என்பதை மறந்தான். இதுவே கட்டுக்கடங்காத அதிகார பலத்தின் போக்கு. பின்னால் வரும் கேட்டை உணராமல் கற்புக்கரசியாகிய தேவி இந்திராணியையே அபகரிக்க எண்ணம் கொண்டான் சூரன். தன் படைத் தலைவனை அழைத்து, ''நீ இப்பொழுதே சென்று இந்திரனைப் பிடித்து என் முன் கொண்டு வந்து நிறுத்து'' என்று கூறினான். இந்திராணியைக் கவர வீரப் பெண்களையும் ஏவினான். அவர்கள் சூரபன்மனின் கட்டளையை நிறைவேற்றுவதற்காக விரைந்து அமராவதி சென்றனர்.

அவர்களைக் கண்ட ஒற்றர்கள் இந்திரனிடம் செய்தியைக் கூறினார்கள். இந்திரன் இந்திராணியையும் அழைத்துக்கொண்டு மாயா சக்தியினால் பூமியில் மறைந்து சென்றான். சூரபன்மனால் ஏவப்பட்ட அசுர வீரர்களும் வீரப் பெண்களும் அமராவதி சென்று இந்திரனையும் இந்திராணியையும் தேடினார்கள். அவர்கள் இருவரையும் காணாததால் ஏமாற்றம் கொண்டார்கள்.

வந்த காரியம் தோற்றுப்போன ஆத்திரத்தில் அங்குள்ள தேவர்களை அசுரர்கள் பிடித்து அடித்து ''இந்திரனும் இந்திராணியும் இருக்குமிடத்தைக் காட்டுங்கள்'' என்று வற்புறுத்திச் சித்திரவதை செய்தார்கள். அவர்களுக்கு இந்திரனும் அவனது சதியும் சென்ற இடம் தெரியாது என்று கண்டபின் அவர்களை விட்டுச் சென்றார்கள்.

வீரமகேந்திரபுரிக்குத் திரும்பிய அசுரர்கள் வானுலகில் நிகழ்ந்ததை சூரபன்மனிடம் கூறினார்கள். சூரபன்மன் கடுங்கோபம் கொண்டான்; மணியை இழந்த நாகம் போல் வருந்தினான். இந்திரனும் இந்திராணியும் இருக்குமிடத்தை எப்படியும் அறிந்து வரும்படி பல ஒற்றர்களை ஏவினான். அந்த ஒற்றர்கள் உலகெங்கும் தேடித் திரிந்து கொண்டிருந்தார்கள்.

இந்திரனும் இந்திராணியும் நீங்கியதால் விண்ணுலகம் பொலிவிழந்தது. மதியும் விண்மீனும் இழந்த இரவு போலச் சோபை குன்றியது. தேவர்களின் புலம்பல் மிகுந்தது.

இந்நிகழ்ச்சிக்கு முன்னரே, இந்திரனின் சோதரனானபடியால் உபேந்திரன் எனப்படும் விஷ்ணுமூர்த்தி விண்ணுலகத்தை விட்டுத் தமது வைகுண்டத்தை அடைந்திருந்தார். இந்திரனின் புதல்வனாகிய சயந்தன் ஸ்ரீமன் நாராயணரைக் காண வைகுண்டம் சென்று அங்கேயே தங்கியிருந்தான். தனது தாய் தந்தையர் மறைந்தோடியதையும் அசுரர்களின் கொடுமையையும் கேட்டு அவன் மிகவும் வருந்தி மீண்டும் பொன்னுலகம் வந்தான். தேவர்களின் ஆறாத்துயரைக் கண்டு மனம் நொந்தான். தாய் தந்தையைக் காணாமல் துயரக் கடலில் மூழ்கினான்.

நாரத முனிவர் சயந்தனின் முன் தோன்றினார். சயந்தன் நாரதரை வணங்கி, ''சூரபன்மனுக்கு அஞ்சி என்

திருமுருக கிருபானந்தவாரியார்

தாய் தந்தையர் மறைந்தோடி ஒளிந்தனர்; அவர்கள் எங்கே சென்றனர் என்பதறியாமல் வருந்துகிறேன். எனது துயர் எப்போது நீங்கும்?'' என்றான்.

''சயந்தா! இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது இயல்பேயாகும். சந்திரனுக்குத் தேய்வும் வளர்வும் மாறி மாறி நிகழ்வது போல் எவரது வாழ்விலும் உயர்வும் தாழ்வும் மாறி மாறி வந்தபடிதான் இருக்கும். வினைக்குத் தக்கவாறு நன்மை தீமைகள் வரும். வருந்தாதே. விரைவில் சூரபன்மன் அழிவான்'' என்று ஆறுதல் கூறினர். மனம் தேறிய சயந்தன் மற்ற தேவர்களுக்கும் ஆறுதல் கூறினான்.

**வி**ண்ணுலகிலிருந்து மறைந்து போன இந்திரன் தன் தேவியாகிய இந்திராணியுடன் தமிழகத்தில் உள்ள சீர்காழிப் பதியை யடைந்தான்.

தேவலோகத்தில் ஏகசக்ராதிபனாக வாழ்ந்த காலம் முடிந்த பின் தனது எளிமையை உணர்ந்தான். அமரர் நாயகன் என்ற விருது போன பின் ஆண்டவனின் அடிமையாக இருக்கும் விருப்பம் அவனுள் எழுந்தது. சோதனைக் காலங்களிலேயே சித்தத் தெளிவும், தெய்வ நினைவும் மிகும். இறைவன் சோதனை புரிவதன் நோக்கமே இது தான். தேவராஜன் தெய்வபக்தி மிகப் பெற்றான். ஆண்டவனருளின்றி உய்ய வழியில்லை யெனக் கண்டான்.

அசுரருக்கும் அமரருக்கும் வித்தியாசம் இதுவே. இரு சாராருமே தவறு செய்வதுண்டு. ஆனால் தவறு அடையுங்கால் அமரர்கள் தெய்வ நினைவு கொண்டு பச்சாதாபத்துடன் பக்தி புரிவர். தக்ஷன் செய்த வேள்வியில் தேவர் யாவரும் சிவநிந்தை புரிந்தது தவறு. அந்தத் தவற்றினாலேயே பின்னால் பலவாறாகத் துன்புற்றனர். அவ்வாறு துன்புறும்போது அவர்கள் தங்களது தவற்றுக்காகவே தண்டனை பெறுகிறோம் என்ற நல்லுணர்ச்சியைப் பெற்றிருந்தனர். அசுரரோ எத்துணை அபாயம் ஏற்படினும் அகம்பாவத்தை விடமாட்டார்கள்.

சிவபெருமானுக்குத் தொழும்பு செய்ய விரும்பிய தேவராஜன் சீர்காழியில் திருநந்தவனம் அமைத்தான். சந்தனம், அகில் முதலிய மரங்களால் வேலி கோலி சிறு சண்பகம், கோங்கு, மல்லிகை, முல்லை, செவ்வந்தி முதலியவற்றைப் பயிர் செய்தான். அந்த நந்தவனத்தில் மலர்ந்த மணம் மிகுந்த மலர்களால் சிவபெருமானைப் பூசித்து வழிபாடு செய்து கொண்டிருந்தான்.

சூரபன்மனின் ஒற்றர்கள் அவ்விடத்தையும் நெருங்கினர். இதை அறிந்த இந்திரன் தன் மனைவியுடன் மூங்கில் வடிவாய் மறைந்திருந்து தவம் புரியலானான். சூரபன்மனின் ஒற்றர்கள் இந்திரனைக் காணாமல் திரும்பினார்கள்.

அவுணர்களின் கொடுங்கோன்மையால் மழை பொழியவில்லை. அதனால் இந்திரன் வளர்த்த திரு நந்தவனம் வாடியது. தேவராஜப் பதவியில் தான் சுகமாக இருக்க இயலவில்லை எனில் ஆண்டவனுக்குக் கிங்கரனாக இருந்து மலர் வழிபாடு செய்யவும் தடை வந்ததே என்று உளம் வருந்திய இந்திரன் எம்பெருமானை வணங்கித் துதித்தான்.

''தேவராஜன்! துயருறாதே! நீ வைத்த நந்தவனம் வாடிப்போயிருந்தாலும் அழிந்து விடாது. இந்தத் தலத்தில் திவ்விய தீர்த்தமொன்று வந்து பாய்ந்து அதனை வளப்படுத்தும்'' என்று அசரீரி வாக்கு எழுந்தது.

''இதுவும் சிவபெருமானின் திருவருளே!'' என்று இந்திரன் மகிழ்ந்தான்.

தமிழகத்தைத் தேடிப் பாய்ந்து, தாயாக அருள் புரியும் அந்தத் திவ்விய தீர்த்தத்தின் வரலாற்றை இனி பார்ப்போம்.

(தொடரும்)

விவாஹம், ஷஷ்டியப்தபூர்த்தி,
க்ருஹப்ரவேசம் ஆகிய விசேஷங்களில் பரிசளிப்பதற்குகந்தது!

## லிப்கோவின் மகத்தான வெளியீடு!

(சுமார் 5000 பக்கங்கள்)

கீர்த்தனாசார்ய ஸ்ரீ உ. வே. C. R. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்களின்

# ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம்

(தமிழ் வசனம்)

1. பால காண்டம் (350 பக்கங்கள்)
2. அயோத்யா காண்டம் (412 பக்கங்கள்)
3. ஆரண்ய காண்டம் (210 பக்கங்கள்)
4. கிஷ்கிந்தா காண்டம் (190 பக்கங்கள்)
5. ஸுந்தர காண்டம் (474 பக்கங்கள்)
6. யுத்த காண்டம் (504 பக்கங்கள்)
7. உத்தர காண்டம் (276 பக்கங்கள்)
8. ஸ்ரீமத் வால்மீகி ராமாயண தத்வார்த்த தீபிகை (ராமாயண கோட்டுகள்) (472 பக்கங்கள்)
9. இக்ஷ்வாகு குலதனம் என்னும் ஸ்ரீரங்க மாஹாத்மியம் (440 பக்கங்கள்)
10. ஸ்ரீராம ஸ்தோத்ரமாலா (352 பக்கங்கள்)
11. ஸ்ரீமத் ராமாயண பாராயண வகைகளும் முறைகளும், ஸ்ரீராம பூஜா மந்த்ராநுஷ்டான க்ரமமும் (96 பக்கங்கள்)
12. ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம் (24 பக்கங்கள்)
13. குமரனும் கோசலை குமரனும் என்னும் திருப்புகழில் ராமாயணம் (80 பக்கங்கள்)
14. Select Shrines of Sri Rama (Art Plates) (114 பக்கங்கள்)

மேற்கண்ட 14 புஸ்தகங்களை வாங்குபவர்களுக்கு மட்டும்
இலவசமாக அளிக்கப்படுபவை
(கைவசமுள்ளவரை):

15. ஸம்ஸ்க்ருத ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் (734 பக்கங்கள்)
16. ஸ்ரீராமர் அலுமினியப் படம்
17. ஸரஸ்வதி பீடம் (சிக்குப் பலகை)
18. அக்ஷதை பரணி
19. இலகப் பை
20. மேற்கண்டவைகளைத் தாங்கும் மரப் பெட்டி

மேற்படி வெளியீடுகள் அனைத்தும் சேர்ந்து
**விலை ரூ. 140**
(தபால் செலவு, பாக்கிங், ரயில்வே அல்லது லாரி கட்டணம் வேறு)

ஸ்ரீராமநவமியை முன்னிட்டுச்
சலுகை விலை
(1-4-1965 முதல் 30-4-1965 முடிய)
மொத்தமாகச் செலுத்துபவர்க்கு
சலுகை விலை ரூ. 125
(தபால் செலவு, பாக்கிங், ரயில்வே அல்லது லாரிகட்டணம் உட்பட)



பதிப்பகத்தார்

**தி லிட்டில் ப்ளவர் கம்பெனி**

தி. நகர் :: சென்னை–17

NALIN



தமிழக கவர்னரோடு திரு நாராயணசுவாமி.

# செயல் திறன் மிக்க சித்ரா நாராயணசுவாமி

ஏ. ஜி. வேங்கடாச்சாரி

பல துறைகளில் தேசப் பணி புரிந்து வரும் ஸ்ரீ சித்ரா நாராயணசுவாமியின் அறுபதாண்டு நிறைவு ஏப்ரல் 9-ந் தேதி நிகழ்கிறது. இந்த நன்னாளில் 'கல்கி'யின் நல்வாழ்த்துக்களை அவருக்கு அளிக்கிறோம். அவரிடம் நமக்குள்ள பேரன்பையும் பெருமதிப்பையும் தெரிவிக்குமுகமாக இவ்விதழின் மேலட்டையில் அவரது உருவத்தை வெளியிட்டு மகிழ்கிறோம். — ஆசிரியர்

நேர்மை, நாணயம், ஆழ்ந்த படிப்பு, சலியாத உழைப்பு, பரோபகாரத்தில் ஆர்வம், செய்நேர்த்தியில் பெருமை, அறிவுடைமை, சீரிய தேசபக்தி, பண்புடைமை, பொதுஜன சேவையில் நீங்காத அக்கறை — இத்தனை குணநலன்களும் ஒருசேரத் திகழ்பவர் ஸ்ரீ எஸ். நாராயணசுவாமி. நமது பொது வாழ்வில் அவர் இரண்டறக் கலந்து உழைக்காத துறையே இல்லை. அவரது கைபட்டுத் துலங்காத பணியே இல்லை.

பொதுமக்களுக்கு என்றே அவரைப்போல உழைத்தவர்கள் மிகமிகச் சிலரே. அவரது சாதனைகள் எல்லா வகைகளிலும் பிறருக்கு எடுத்துக்காட்டுக்களாக விளங்கக் கூடியவை. எனவே அவரது ஷஷ்டியப்த பூர்த்தியின் போது பொதுநலனை முன்னிட்டு அவரது சேவைகளை நாடறியச் செய்வது அவசியமென நண்பர்கள் அனைவரும் கருதுகின்றனர்.

## பெற்றோரும் படிப்பும்

ஸ்ரீ நாராயணசுவாமியின் தந்தை ஸ்ரீ கே. சேஷ அய்யர் திருவிடைமருதூரைச் சேர்ந்தவர். சேலம் காலேஜில் உதவி பிரின்சிபாலாகவும், பிறகு மாயூரம் ஹைஸ்கூலில் தலைமையாசிரியராகவும் பணியாற்றிப் புகழ் பெற்றவர். ராஜாஜியின் நண்பர். 1905ல் அவர் சேலத்தில் இருந்தபோது ஸ்ரீ நாராயணசுவாமி பிறந்தார். அவரது தாயார் கும்பகோணத்தில் ஒரு நல்ல வைதிக குடும்பத்தைச் சேர்ந்தவர். ஸ்ரீ நாராயணசுவாமிக்கு ஒரு தமையனும் ஐந்து சகோதரிகளும் உண்டு. அவரது தமக்கை தேச விடுதலைப் போரில் பங்கு பற்றிச் சிறை சென்றவர். ஸ்ரீ நாராயணசுவாமி பெரிய குடும்பத்தில் பிறந்தவர். எளிய நிலையிலிருந்து உயர்ந்தவர். வாழ்க்கைப் போராட்டத்தை நன்கு உணர்ந்தவர். எனவே பொதுநலப் பணிகளுடன்கூட, செழுங்கிளை தாங்குவதை ஒரு பாக்கியமாகக் கருதினார். மாயூரத்திலும் சேலத்திலும் கல்வி பயின்ற பிறகு கல்லூரிப் படிப்புக்காக அவர் சென்னை வந்தார். பச்சையப்பன் கல்லூரியில் படித்தார். அது ஸ்வராஜ்யக் கட்சி வலிமை பெற்று வளர்ந்து, தேச பக்த உணர்வுள்ள இளைஞர்களை யெல்லாம் ஈர்த்த காலம். ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாஸ அய்யங்காரின் உற்சாகமும், ஏற்கெனவே சேலத்தில் இருந்தபோது ராஜாஜி ஊட்டிய நாட்டுப் பற்றுமாகச் சேர்ந்து தேச விடுதலையிலும் சமூகப்

அரசியல் பிரமுகர்களுடன் திரு நாராயணசுவாமி





தொழில் பிரமுகர் 'சித்ரா' நாராயணசுவாமி குடும்பத்தினர்.

பிரச்னைகளிலும் ஸ்ரீ நாராயணசுவாமியின் கவனத்தைத் திருப்பிவிட்டன. சிறிதும்பெரிதுமான பல பொதுப் பணிகளில் முழுமூச்சுடன் ஈடுபட்டார். சென்னையில் 1927ல் நடைபெற்ற காங்கிரஸ் மகாசபை ஏற்பாடுகளில் துணை புரிந்தார். அதை அடுத்து ஆவேசமாகக் கிளர்ந்தெழுந்த சைமன் கமிஷன் பகிஷ்கார இயக்கத்தை உருவாக்கிய இளைஞர் குழாத்தில் அடக்கமாகப் பணியாற்றினார். அப்போது தான் அவரது பரிச்சயம் எனக்கு ஏற்பட்டது.

## தொழில் பிரவேசம்

1928ம் ஆண்டில் ரொப்ட் — போர்ப்ஸ் சார்டு என்ற ஆங்கிலேய பங்கு மார்க்கெட் கம்பெனியில் ஸ்ரீ நாராயணசுவாமி குமாஸ்தாவாக அமர்ந்தார். இந்த ஸ்தாபனத்தில் அவரைச் சேர்த்தவர் ஸ்ரீ டி. என். கிருஷ்ணசுவாமி. எளிய குமாஸ்தாவாக அதில் சேர்ந்தவர் வேகமாக ஏற்றம் கண்டு சில ஆண்டுகளில் சொந்தமாக அதே துறையில் கம்பெனி நடத்தத் தொடங்கினார். தமது ஆற்றலால் முன்னேறிக் காலக் கிரமத்தில் அவர் பங்கு மார்க்கெட்டின் தலைவராகித் தென்னிந்தியாவின் தொழில் வளர்ச்சிக்குப் பெருதவி புரிந்து, பொருளாதார, தொழில் துறை, நிதி விவகாரங்களில் இணையற்ற நிபுணராக மாறிய வரலாறு ஒரு தனி நூலுக்கு உரிய விஷயம். இவையெல்லாம் கைகூடியதற்குக் காரணம், அவரைக் கண்டு பழகியவர்கள் அவரிடம் முழு நம்பிக்கை வைக்கலாம் என்றவாறமைந்த அவரது குணநலன்கள்தாம்.

## சமூக சேவை

தமது ஜீவ யாத்திரைக்கான அஸ்திவாரத்தை அமைத்துக்கொண்டு உழைக்கும் போதே விடுதலை இயக்கமும் சமூக சேவையும் அவரை விடவில்லை. ஒரு பிரிட்டிஷ் கம்பெனியில் பணியாற்றிய வண்ணம் இவற்றில் தீவிரமாக அக்காலத்தில் ஈடுபடுவதெனில் அதிலுள்ள சிரமத்தை ஊகித்துக் கொள்ளலாம். வெளிப்படையான ராஜீய நடவடிக்கைகள் சில காலம் அடக்கமாக நடைபெற்றன. ஆனால் சமூக சேவையில் முழுமூச்சுடன் ஈடுபடுவதற்கு அவரது பதவி நிலை குறுக்கே நிற்கவில்லை.

வேலைக்குச் செல்வதற்கு முன்னரே பொதுநல சேவை உணர்ச்சியுள்ள இளைஞர் பலர் சேர்ந்து தோற்றுவித்திருந்த "மெட்ராஸ் யூத் லீக்" என்ற ஸ்தாபனத்தில் சேர்ந்து 1925 முதல் ஸ்ரீ நாராயணசுவாமி தொண்டாற்றி வந்தார். அது 1925 முதல் 1931 வரை நடைபெற்றது. எல்லா இளைஞர்களும் அதில் சேர்ந்து தமது சக்திக்கேற்ப உழைக்கக் கூடிய வகையில் அதன் வேலைத் திட்டம் அமைந்திருந்தது. ஸ்ரீமதி ருக்மிணி லக்ஷ்மிபதி அதன் தலைவி. ஒரு சிலர் நாம் விடுதலைப் போராட்டத்திலும் மக்களிடையே ராஜீய அறிவைப் பரப்புவதிலும் ஈடுபட முடிந்தது. அவர்களுக்கு என்று யூத் லீகின் ராஜீயப் பிரிவு ஒன்று ஏற்பாடாயிற்று. அது தேசிய விடுதலைப் போருக்குச் சிறந்த பக்க பலமாக உருப்பெற்றது. விடுதலைப் போராட்டங்களுக்கான சூழ்நிலையை அமைத்துக் கொடுப்பது அதன் இயற்கையான பணியாக அமைந்தது.

வெறும் ராஜீயப் பிரசார ஸ்தாபனமாக நின்றுவிடாமல் பத்து அம்ச நிர்மாணத் திட்டத்தை அமைத்துக்

ராஜாஜியும் சித்ரா நாராயணசுவாமியும்.





பிரபல விஞ்ஞானி ஸர் ஸி. வி. ராமனுடன்....

கொண்டு அறு பாடு பட்டு, காலத்தால் சோர்ந்துவிட்ட பல பயனற்ற, தீமை நிறைந்த, இன்றைய உலகின் நிலவரத்துக்கு ஒவ்வாத பழக்க வழக்கங்களில் உழன்று கொண்டிராமல், அவற்றிலிருந்து தேச மக்கள் விடுபட வேண்டும். இளைஞர் சமூகத்தின் சிந்தனையும் செயல்பாடும் எல்லா வகைகளிலும் முற்போக்குத் தன்மையுள்ளதான நவ இந்தியாவின் சிருஷ்டியை இலக்காகக் கொண்டிருத்தல் வேண்டும் என்று இந்த இளைஞர் குழாத்தினர் விரும்பினர். ''இளைய பாரதத்தினாய்! வா! வா! வா!'' என்பதே அவர்களது முதல் முழக்கமாக இருந்தது.

ஆலயங்களில் மிருக பலியைத் தடுக்கும் ஜீவகாருண்யப் பணி, மதுவிலக்குப் பிரசாரம், சூழ்நிலைச் சுகாதாரத்துக்காக உழைப்பு, பெண் கல்வி, திருமண வயது உயர்வுக்குச் சட்டமியற்றுவதற்கு ஆதரவுப் பிரசாரம், தீண்டாமை ஒழிப்பு, சுதேசி இயக்கம், இளைஞர்கள் கட்டுப்பாடாக உண்மை உணர்வுடன் பொதுஜன சேவை புரிவதற்குப் போதிய பயிற்சி தரும் முகாம்களை அமைத்தல் — இவை யூத் லீக் மேற்கொண்ட பணிகளில் முக்கியமானவை. இவை யெல்லாமே ஒழுங்காக, பொது வாழ்வில் அன்று இருந்த முன்னணிப் பிரமுகர்களின் நல்லாசி பெற்றுப் பல வருஷ காலம் நடைபெற்றன. இந்த வேலைகளின் தனி அம்சம், எல்லாம் இளைஞர்களே பொறுப்பேற்று நடத்திவைத்ததுதான். இதன் காரணமாக இதில் ஈடுபட்ட எல்லோருக்குமே நிர்மாண வேலைகளை ஸ்தாபன ரீதியில் சிறப்பாக நடத்துவது எப்படி என்ற அனுபவம் கிட்டியது.

**பெர்மிங்ஹாமில் அகில உலக மாதர்கள் மகாநாட்டில் கலந்து கொண்ட பிரதிநிதிகளோடு ஸ்ரீமதி விசாலாட்சி நாராயணசுவாமி.**



## ராஜாஜியின் சிரத்தை

யூத் லீகில் உழைத்தவர்களில் பலர் பின்னர் பொது வாழ்வில் முக்கியஸ்தர்களாயினர். அதன் ராஜீயப் பிரிவுக்கு ஊக்கமளித்தவர் ஸ்ரீ கே. பாஷ்யம். அதன் மதுவிலக்குப் பிரசாரப் பணிகளில் நேரடியாகக் கலந்துகொண்டு ஊக்கமளித்தவர் ராஜாஜி. அதன் பல கூட்டங்களில் அவர் கலந்துகொண்டு இளைஞர்களுக்கு உற்சாகமளித்தார். 1928 முதல் பரபரப்பான பல மாறுதல்கள் ராஜீய, சமூக சேவைத் துறைகளில் ஏற்பட்டு வந்தன. எல்லாப் பணிகளிலும் ஒரு தீவிரம் காணப்பட்டது. இளைஞர்கள் விஷயத் தெளிவுடன் எல்லாப் பணிகளிலும் ஈடுபட வேண்டியது அவசியமெனக் கருதி 1929ல் ''வாய்ஸ் ஆப் யூத்'' என்ற ஆங்கில சஞ்சிகை தோற்றுவிக்கப்பட்டது. அதன் செயல் முறை ஆசிரியராக இருந்து மிகச் சிறப்பாக அதை நடத்தியவர் ஸ்ரீ நாராயணசுவாமி. முதல் இதழுக்கு ஆசிச் செய்தி கேட்டபோது, அதன் உபயோகத்தில் ராஜாஜி அவநம்பிக்கை தெரிவித்தார். ''எழுத்தில் அள்ளிக் கொட்டுவது வளர்ந்தால் வேலை படுத்துவிடும்'' என்ற சந்தேகத்தையும், எச்சரிக்கையையும் தமது ஆசியுரையில் அவர் கலந்து வழங்கினார். ஆனால் வெகு விரைவிலேயே இச் சஞ்சிகையைப் பாராட்டியதுடன், தமது மதுவிலக்குப் பணிக்காக ''விமோசனம்'' என்ற சஞ்சிகையை ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி)யை ஆசிரியராகக் கொண்டு ராஜாஜியே தொடங்கியது பலருக்கு நினைவிருக்கும். அத்துடன்கூட ''லீக் ஆப் யூத்'' ஸ்தாபனத்தின் மதுவிலக்குப் பணிகளில் அவர் முழுமூச்சுடன் ஈடுபட்டது அதன் நிறை பணிக்கு ஒரு சான்று.

## சர்க்கார் தொல்லை

''லீக் ஆப் யூத்'' மீதும், ''வாய்ஸ் ஆப் யூத்'' மீதும் அக்காலத்திய பிரிட்டிஷ் அரசாங்கத்தின் திருநோக்கு படிப்படியாகத் திரும்பலாயிற்று. பத்திரிகைகளைக் கட்டுத் திட்டம் செய்யும் அவசரச் சட்டம் 1930ல் பிரகடனமாயிற்று. அதையடுத்து அச்சஞ்சிகையை வெளியிட அச்சாபீசுகள் மறுத்து விட்டன. எனவே சில மாதகாலம் அதன் பிரசுரத்தை நிறுத்தி வைத்துவிட்டு, அச்சட்டம் வாபஸான பிறகு அதே ஆண்டில் மீண்டும் தொடங்கினர்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகளின்
ஸ்ரீகாசி ஹநுமான் கட்டம் ஸ்ரீ சங்கர (சுகதேவ) மடம்

## ஸ்ரீ சந்திர மௌளீச்வரர், ஸ்ரீ ஆதி சங்கரர் ஆலயம்
## ஜீர்ணோத்தாரணத் திருப்பணிக்கு

# திரவிய வேண்டுகோள்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி

## ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்வாமிகள் மடம்

### காஞ்சீபுரம்

முகாம் : காஞ்சீபுரம்

தேதி : 26-1-65




**ஸ்ரீ எஸ். பரமசிவ ஐயரவர்களுக்கு**
**ஆடிட்டர், கள்ளிக்கோட்டை**

அனேக நமஸ்காரம்,

ஸர்வ க்ஷேத்ரங்களிலும் உத்தமமானதும் பாகீரதியின் புண்ய தீரத்தில் விளங்குவதும் தன்னிடம் ஜீவயாத்திரையை முடிக்கும் பாக்யசாலிகளுக்கு பரமேச்வரன் தாரக நாமாவை உபதேசிக்கும் மகிமை வாய்ந்ததுமான ஸ்ரீ காசி க்ஷேத்ரத்தில் ஹநுமான் கட்டத்தில் உள்ள ஸ்ரீ மடத்தை திருப்பணி செய்து ஸ்ரீ காசி க்ஷேத்ர யாத்ரீகர்களுக்கு வசதிகள் செய்து கொடுப்பதற்குத் தாங்கள் முன் வந்திருப்பதை அறிந்து ஸ்ரீ மகா சன்னிதானத்தில் மிகவும் மகிழ்ச்சியடைகிறார்கள்.

ஸ்ரீ காசி சங்கரமடத்தில் தாங்கள் 1958-ம் வருஷம் யாத்ரீகர்களுக்கு அவரவர்கள் முறைப்படி கர்மாக்கள் செய்ய வசதி உள்ள இரு கட்டிடங்களை சொந்தத்தில் ரூ. 12000 (பனிரண்டாயிரம்) செலவு செய்து கட்டிக் கொடுத்துள்ளதை சந்தோஷத்துடன் அங்கீகரிக்கின்றார்கள். இப்போது அம்மாதிரியல்லாமல் பலருக்கும் புண்யம் உண்டாகும்படி தனிகர்களிடம் யாசித்து ஸ்ரீ காசி மடத்திற்கு வரும் யாத்ரீகர்களுக்கு மிகவும் சௌகர்யமாக விதிப்படி கர்மாக்கள் செய்ய வசதி உள்ளதாய் மேற்படி மடத்தின் பழைய கட்டிடங்கள் எல்லாவற்றையும் ஜீர்ணோத்தாரணம் செய்யும்படியும் மேற்படி மடத்தில் உள்ள பகவான் ஸ்ரீ சந்திர மௌளீசுவரர் கோவிலைப் புதுப்பித்துப் புது மண்டபங்கள் அமைக்கும்படியும் மேற்படி கைங்கர்யங்கள் அனைத்தையும் ஏற்று எடுத்துச் செய்யும் பொறுப்பைத் தங்களுக்கு ஸ்ரீமுகம் மூலம் ஸ்ரீ மஹா சந்நிதானம் அளித்திருக்கிறார்கள்.

ஸ்ரீ காசி சங்கர மடத் திருப்பணிக்கு ஆஸ்திகர்கள் அனைவரும் திரவிய சகாயம் செய்து அதனால் ஏற்படும் ச்ரேயஸையும் அனுக்ரஹத்தையும் அடைய வேண்டும் என்று ஸ்ரீ மஹா ஸந்நிதானத்தின் ஆக்ஞையான விவரமும் எல்லா ஆஸ்திகர்களும் இந்த மஹா கைங்கர்யத்தில் ஈடுபட்டு மேற்படி ஆடிட்டர் ஸ்ரீ பரமசிவ ஐயர் அவர்களுக்கு இயன்ற பொருளுதவி செய்து ஸ்ரீ விச்வேசுவரருடைய கிருபைக்குப் பாத்திரமாகுமாறு ஸ்ரீ மஹா ஸந்நிதானம் ஆசாஸனம் செய்கிறார்கள் என்னும் விவரமும் தெரிவிக்கலான காரியம்.

அனேக நமஸ்காரம்

**வி. எஸ். விஸ்வநாத அய்யர்**
மானேஜர்







இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கின் ரெக்கரிங்
டிபாஸிட் திட்டத்தின் சேமிப்பைக்கொண்டு.

குறைந்த பட்சம் ரூ. 5/-லிருந்து அதிக பட்சமாக அதன் பெருக்குத் தொகை ரூ. 500/- வரையில், டிபாஸிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பிரதிமாதம் டிபாஸிட் செய்யும் தொகையான :

ரூ. 5/- ரூ. 10/- ரூ. 50/- ரூ. 100/- ரூ. 500/-

கீழ்க்கண்டபடி பெருகும் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 12 மாதங்களில் | ரூ. 61.00 | ரூ. 122 | ரூ. 610 | ரூ. 1,220 | ரூ. 6,100 |
| 24 மாதங்களில் | ,, 124.50 | ,, 249 | ,, 1,245 | ,, 2,490 | ,, 12,450 |
| 36 மாதங்களில் | ,, 192.00 | ,, 384 | ,, 1,920 | ,, 3,840 | ,, 19,200 |
| 48 மாதங்களில் | ,, 262.00 | ,, 524 | ,, 2,620 | ,, 5,240 | ,, 26,200 |

# இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் லிட்.

தலைமைக் காரியாலயம் : 151, மவுண்ட் ரோட், சென்னை-2

உங்களுக்கு சேவை செய்வதற்காக 100 க்கு மேற்பட்ட கிளை அலுவலகங்கள் இந்தியாவின் முக்கிய இடங்களில். இதில் தமிழ் நாட்டில் மட்டும் 60 க்குமேற்பட்ட கிளை அலுவலகங்கள் உள்ளது.

IOB-17-SA

எம். ஸிடி. முத்தையா
சேர்மன்

கே. எம். நஞ்சப்பா
ஜெனரால் மானேஜர்

## விடுதலைப் போர்

சென்னையில் ''உதய வனம்'' முகாம் அமைத்து சத்யாக்கிரஹப் போராட்டம் வலுவடைந்து வந்த காலம் அது. ஸ்ரீமதி துர்க்கா பாய் தலைமையின் கீழ் உப்பு சத்யாக்கிரஹம் நடைபெற்றது. ''லீக் ஆப் யூத்'' ராஜீயப் பிரிவினர் முழுமூச்சுடன் அதில் ஈடுபட்டனர். இதையொட்டி 1931ல் கைதாகிப் பிறகு விடுதலையான இளைஞர்களில் ஸ்ரீ நாராயண சுவாமி ஒருவர்.

1931ல் ஏற்பட்ட காந்தி இர்வின் உடன்பாட்டை அடுத்துத் தெம்பு உண்டாகி, இளைஞர்கள் மகிழ்ச்சியுடன் இருந்த காலம் அது. லாபகரமாக நடந்து வந்த ''வாய்ஸ் ஆப் யூத்'' சஞ்சிகையைத் தாமாகவே முன்வந்து நிறுத்திவிட்டார்கள். பிரதான ஆசிரியர்கள் சிறைப்பட்டதால் ஸ்தாபனமும் கலைக்கப்பட்டது. அடுத்த ஆண்டில் ஸ்ரீ நாராயண சுவாமிக்குத் திருமணம் நடைபெற்றது.

தமது கணவரைப் போலவே ஸ்ரீமதி விசாலாட்சி நாராயணசுவாமியும் பெரிய குடும்பத்தில் பிறந்தவர். ஆரம்பத்திலிருந்தே சுலபமாகச் சிரமங்களைத் தாங்கிக் கொண்டு எல்லாப் பணிகளிலும் தமது கணவருக்குக் கைகொடுத்து இடையறாது அவருக்கு உற்சாகமூட்டி வந்தார் விசாலாட்சி. இவர்கள் எல்லா வகையிலும் ஒரு லட்சியத் தம்பதி எனக் கூறலாம். முதலில் இவர்கள் மணவாழ்வைத் தொடங்கியது மயிலாப்பூரில் இரண்டே அறைகள் கொண்ட ஒரு சிறு வீட்டில்.

ஸ்ரீ நாராயணசுவாமி வேலை செய்து வந்த பிரிட்டிஷ் புரோக்கர் கம்பெனியின் பெயர் 'மகானக்கி' என்ற மாறுதலை அடைந்தது. குடும்பத்தைச் செவ்வனே நடத்த இவரது வருமானம் மட்டும் முதலில் போதுமானதாக இருக்கவில்லை. எனவே நிலைமை சற்று சீர்ப்படும்வரை மயிலை லேடி சிவஸ்வாமி அய்யர் பெண் பாடசாலையில் ஸ்ரீமதி விசாலாட்சி ஆசிரியப் பணி ஆற்றி வந்தார். பிறகு நல்ல காலம் வந்தது. படிப்படியாக ஏற்றம் கண்டனர். 1941ல் இப்பொழுது வசிக்கின்ற ''சேஷாத்ரி'' என்ற வசதியான இல்லத்தை அமைத்து அதில் குடிபுகுந்தனர்.

1934ம் ஆண்டில் ஸ்ரீ டி. என். கிருஷ்ண சுவாமியுடன் டலால் கம்பெனியில் பாகஸ்த அடிப்படையில் ஸ்ரீ நாராயண சுவாமி சேர்ந்தார். அந்த ஸ்தாபனம் வேகமாக முன்னுக்கு வந்தது. அங்கு மூன்று வருஷங்கள் பணியாற்றிய பிறகு திருவிதாங்கூர் கொல்லம் பாங்கில் பொறுப்பு வாய்ந்த அதிகாரியானார். அந்த ஸ்தாபனம் விரைவில் நின்றுவிட்டது. அப்பொழுதுதான் ஸ்ரீ எ. எம். எம். முருகப்பச் செட்டியாருடன் சேர்ந்து ''ஸ்வஸ்திக்'' என்ற பங்கு பேரக் கம்பெனியை நிறுவி அதில் பாகஸ்தராக இருந்து 1947 வரை அதில் பாடுபட்டார். 1947ல் சொந்தமாக ஸ்ரீ எச். சுப்பிரமணியத்துடன் சேர்ந்து ''சித்ரா'' கம்பெனியைத் தோற்றுவித்து அதன் பெயரும் புகழும் சேவையும் தேசமெங்கும் பரவச் செய்தார்.

## சொல்லு பாப்பா, பொய் சொல்லு பாப்பா!

''அம்மாம்மா! ஸ்டுடியோவுக்குப் போகிறப்போ, 'இவளை நான் கூட்டிக்கிட்டுப் போக மாட்டேன், இவளை நான் கூட்டிக்கிட்டுப் போக மாட்டேன்னு' அப்பவே சொன்னேனே, கேட்டீங்களா? இவ அங்கே வந்து என்ன செஞ்சா தெரியுமா? நாலைந்து புரொட்யூஸர்கள், ஏழெட்டு டைரக்டர்கள், பத்துப் பன்னிரண்டு பத்திரிகைக்காரர்கள் எல்லாம் வந்து சேர்ந்தாப் போல இருக்கிறப்போ, என்னை, 'அம்மா, அம்மா!'ன்னு வாய் ஓயாமக் கூப்பிடறா! இவ என்னதான் எனக்குப் பெண்ணாயிருந்தாலும் அங்கே



வந்து அப்படிக் கூப்பிடலாமா? அவங்க என்னைப் பற்றி என்ன நினைப்பாங்க?''

''அடீ, கர்மமே! ஏண்டி, 'அம்மாவை 'அம்மா'ன்னு கூப்பிடக் கூடாது; 'அக்கா, அக்கா!'ன்னு கூப்பிடணும்'னு உனக்கு நான் எத்தனை தரம் சொல்லியிருக்கேன்? இனிமே கூப்பிடுவியா, அப்படி?''

''இல்லே, பாட்டி, இனிமே அப்படிக் கூப்பிட மாட்டேன் பாட்டி!''

''கூப்பிட்டியோ, தோலை உரிச்சிடுவேன்—ஆமாம்!''



**கண்டித்து வைத்தவள்:** சினிமா நடிகையின் தாயார்.

**கண்டனத்துக்குள்ளானவள்:** சினிமா — நடிகையின் செல்வி.

**தகவல்:** ஒரு சினிமா விசிறி.

## தொழில் நுட்பம்

## தொழில் துறை

சாதாரணப் பங்கு பேரக் கம்பெனியாளராக இருந்த ஸ்ரீ நாராயணசுவாமி தொழில் அதிபராகவும், தொழில் துறை ஆலோசகராகவும் சிறப்புற்றோங்கிய வரலாறு தனிப் பெருங் கதை. இதற்கு அடிகோலியது திருவிதாங்கூர் அரசாங்கத்துடன் 1942ல் அவருக்கேற்பட்ட தொடர்பு. அடுத்த வருஷம் அந்த ராஜ்யம் 3 சதம் வட்டியுடன் கூடிய மூன்று கோடி ரூபாய்க் கடன் வாங்க மார்க்கெட்டை அணுகியது. அதில் கால் பங்குக்கு மேல் ஸ்ரீ நாராயணசுவாமியின் மூலம் கிடைத்தது. இந்தப் பெருவெற்றியின் விளைவாகத் தமது தொழில்களின் வளர்ச்சியில் அக்கறையுள்ள சேஷசாயி ஸ்தாபனத்தினரும், திருவிதாங்கூர்ப் பகுதியிலிருந்த பல மலைத் தோட்ட முதலாளிகளும் அவரது உதவியை நாடினர். உர உற்பத்தி (FACT) ஸ்தாபனம் உட்பட நான்கு சேஷசாயி தொழில் நிறுவனங்கள் கேரளத்தில் வளர்ந்தோங்குவதற்கு அவரது உழைப்பு பயன்பட்டது.

## தோட்டத் தொழில்

மலைத் தோட்ட முதலாளிகள் வெளிக் கடன் உதவி பெற்றுத் தமது உற்பத்தியைப் பெருக்கிக் கொள்வதற்கு ஏற்ற யோசனையைச் சொல்லி, அவை பொதுமக்கள் பங்குகளை வாங்கக் கூடிய கம்பெனிகளாவதற்குத் துணை புரிந்து வேகமாக வளர்ச்சி காண்பதற்கு ஸ்ரீ நாராயணசுவாமியின் யோசனைகள் பெரிதும் பயன்பட்டன. இன்று தெற்கே மலைத் தோட்டத் தொழில் சிறந்து விளங்குகிறது என்றால் ஸ்ரீ நாராயணசுவாமியின் உழைப்பு அதற்கு முக்கியமான காரணம் என்று சொல்லலாம். இது காரணமாகவே அவரை டீ போர்டுக்கு அங்கத்தினராக இரு முறை நியமித்தனர். இத்தொழிலின் பயனுள்ள சீரமைப்புக்கு அவர் பல யோசனைகளைக் கொடுத்தார். மலைத் தோட்டங்களுடன் ஸ்ரீ நாராயணசுவாமியின் தொடர்பு இன்றும் இருந்து வருகிறது. அவர் மூன்று தோட்டக் கம்பெனிகளின் சேர்மனாகப் பணியாற்றி வருகிறார்.

## புதுப் பொறுப்புக்கள்

சென்னை ராஜ்யத்தின் இன்றையத் தொழில் வளர்ச்சிக்குச் சிறந்த ஆலோசகர்களாகத் துணை புரிந்தவர்களில் முக்கியமாகக் குறிப்பிடவேண்டியவர்கள் தொழிலமைச்சர் ஸ்ரீ ஆர். வெங்கடராமனும், ஸ்ரீ எஸ். நாராயணசுவாமியும். திருவிதாங்கூரில் சேஷசாயி ஸ்தாபனங்களின் வளர்ச்சிக்குத் துணை புரிந்ததை அடுத்து 1950க்குப் பின் சென்னை ராஜ்யத்தில் வளர்ச்சி கண்ட அதன் பல்வேறு தொழில்களில் அவருக்கு விசேஷப் பொறுப்பு ஏற்பட்டது. ரப்பர், ரேயான், கெமிகல்ஸ், கேபிள்ஸ், எஞ்சினீயரிங், மெஷின் — டூல்ஸ், ஜவுளி மில்களுக்கான மெஷின்கள் உட்பட பலவகைத் தொழில்கள் அவரது முயற்சியாலும் உதவியாலும் வளர்ந்தோங்கின: இன்று அவரை டைரெக்டராகக் கொண்டு சிறக்கின்ற தொழிலகங்கள் சுமார் இருபது இருக்கும்.

ஸ்ரீ நாராயணசுவாமி பங்கு மார்க்கெட்டின் சீரமைப்பு, தொழில்களின் வளர்ச்சிப் பிரச்னைகள், வாணிபத் துறை விஷயங்கள், திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி ஆகிய எல்லா விஷயங்களிலும் இடையறாத அக்கறை காண்பித்து, விஷயத் தெளிவுடன் கூடிய கட்டுரைகளை எழுதியும், தொழில்—வர்த்தக ஸ்தாபனங்கள் மூலமாகவும் தமக்குத் தொடர்புள்ள பல்வேறு ஸ்தாபனங்கள் மூலமாகவும் ஏற்படுத்தி வருகின்ற விழிப்பு, நமது ஜனநாயகக் கட்டுக்கோப்பின் அடிப்படையைப் பலப்படுத்துகின்ற பல வகைச் சேவைகளில் முக்கியமானது. இப்பணியைச் செய்கையில், கசப்பான உண்மைகளைத் தைரியமாக எடுத்துரைக்க அவர் தயங்குவதே இல்லை. பெரிய இடத்துப் பொல்லாப்பு வருமே என்று பயப்படுவதே இல்லை. இந்தச் சுதந்திர உணர்வின் காரணமாக அவரது சொல்லுக்கும் செயலுக்கும் முன்னைவிட அதிக மதிப்பு ஏற்பட்டிருக்கிறது எனலாம்.

## அவர் வளர்த்த ஸ்தாபனங்கள்

தமது கம்பெனித் தொழில் பொறுப்புக்களில் மும்முரமாக ஈடுபட்டிருக்கையிலேயே, ஸ்ரீ நாராயணசுவாமி விடுதலை இயக்கத்துக்கு இடையறாது துணை புரிந்து வந்தார். பல்வேறு ஸ்தாபனங்கள் மூலம் எல்லாத் துறைகளிலும் இள வயதினர் ஏற்றம் காண்பதற்காக உழைத்து வந்தார். அவர் கட்டிக் காத்து வளர்த்த ஸ்தாபனங்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவை இந்திய இளைஞர் சங்கம் (ஒய். எம். ஐ. ஏ.), தென் இந்திய தேசிய சங்கம் இரண்டும். இரண்டுடனும் அவரது தொடர்பு நீடிக்கிறது. இரண்டும் எல்லா வசதிகளுடனும் விரிவு படச் செய்துள்ளார். மயிலாப்பூர் ஒய். எம். ஐ. ஏ. ஏற்பாடானது, தென் இந்திய தேசிய சங்கக் கட்டிடத்தில் சாஸ்திரி ஹால் நிர்மாணமானது ஆகியவை அவரது முயற்சியின் நேரடி விளைவுகள். இதைத் தவிர விவேகானந்தா கல்லூரி எம். ஐ. டி. (சென்னை தொழில் நுட்பக் கல்விக் கழகம்) ஆகியவற்றின் அமைப்பிலும் வளர்ச்சியிலும், சென்னையில் பாரதிய வித்யாபவனப் பணிகளிலும் ஈடுபட்டிருக்கிறார். கைவினைத் தொழில்களின் வளர்ச்சி, தாழ்த்தப்பட்ட நிலையில் உள்ள ஏழைகளின் முன்னேற்றம் ஆகியவற்றுக்காக அவர் பாடுபட்டிருக்கிறார்.

''யூத் லீக்'' காலத்திலிருந்தே ஸ்ரீ பி. ஜகந்நாததாஸுடன் சேர்ந்து பழகும் நல்வாய்ப்பு ஸ்ரீ நாராயணசுவாமிக்குக் கிடைத்தது. ஸ்ரீ தாஸ் ஒரிஸ்ஸா ஹைகோர்ட் நீதிபதியாகவும் சுப்ரீம் கோர்ட் ஜட்ஜாகவும் சேவை புரிந்து தமது தள்ளாமைக் காலத்தில் சென்னையில் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார். இன்றும் ஸ்ரீ நாராயணசுவாமியிடம் அவருக்கு நீங்காத அன்பு உண்டு. இருவரும் தந்தை — மகன் போலப் பழகுகிறார்கள்.

I don't want to be a Big Shot

...I just want to feel like one!

You can, with MONARCH After Shave Lotion. MONARCH is far more soothing...cooler, more refreshing. Makes you feel great. Since a bottle lasts so long, why put up with less than the best! Get MONARCH right away.

MONARCH AFTER SHAVE LOTION



J.K. Helene Curtis

Sole Distributors in India: SPENCER & CO. LTD. 153 Mount Rd., Madras 2
Spencers Building, Forjett Street, Bombay 26
70 Diamond Harbour Rd., Kidderpore, Calcutta 23 • 19A Alipore Rd., Delhi 6

## ஆர்வமும் ஏமாற்றமும்

ஸ்ரீ நாராயணசுவாமி நாட்டின் திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியை வரவேற்றார். நவ இந்தியாவைச் சிருஷ்டிப்பதற்கு நேருஜி செய்த முயற்சிகளை ஆதரித்தார். ஆனால் முதல் ஐந்தாண்டுத் திட்டத்துக்குப் பிறகு அரசாங்கத்தின் பொருளாதாரக் கொள்கைகளும் நடைமுறைகளும் உருவாகி அமுலான விதமும், செய்நேர்த்தி அடியோடு மதிப்பிழந்து போனதும் பல பழைய தேச பக்தர்களைப் போலவே ஸ்ரீ நாராயணசுவாமிக்கும் வருத்தத்தையும், ஏமாற்றத்தையும், ஓரளவு அதிர்ச்சியையும் கொடுத்தன.

வேகமாக அபிவிருத்தி அடைந்து வந்த மேலை நாடுகள் முற்றிலும் பிரத்தியட்ச உணர்வுடன் வளர்ச்சிப் பிரச்னைகளைக் கவனித்துச் செயலாற்றி வருகையில், நமது தேசம் மட்டும் உளுத்துப்போன வறட்டுச் சித்தாந்த ரீதியில் மக்களிடையே பிளவுகளைப் பெருக்கி, குரோதத்தையும் பகைமையையும் வளர்த்து, கிளர்ச்சி மனப்பான்மையைச் சாசுவதமாக்கி, வேகமான அபிவிருத்திக்கு இன்றியமையாத ஒருமைப்பாட்டு உணர்வைச் சிதைத்து வருவதாக அவருக்குத் தோன்றியது. சோஷலிஸ சமுதாயத்தைச் சிருஷ்டிக்கின்ற முயற்சி என்று சொல்லிக்கொண்டு பசியும் பிணியும் பகையும் வளர்ச்சி கண்டு வருகின்ற நிலை அவருக்கு வேதனையைக் கொடுத்தது. அவ்வப்பொழுது ராஜாஜியைப் போலத் தனியராகவே அவர் ஆட்சேபக் குரல் கொடுத்து மக்களையும் அரசாங்கத்தையும் எச்சரித்து வந்தார்.

## சுதந்திரக் கட்சி

சீடன் பகு, வரிப் பகு, அத்தியாவசியப் பொருட்களின் விலைவாசி உயர்வு ஆகியவை மக்களைத் தாக்கின. இதை ஒரு கட்சியாக ஆட்சேபிக்கவேண்டுமென்ற கருத்து ஓங்கியது. திட்டமிட்ட பொருளாதார அபிவிருத்திக்கு அவசியமெனச் சொல்லி ஏற்பாடு செய்த பெர்மிட் — கோட்டா — லைசென்ஸ் முறையானது ஆளும் கட்சியின் ஆதிக்கத்தை ஸ்திரப்படுத்தவே பயன்படுகிறது என்று கருதியவர்கள் ஒன்று சேர்ந்து சுதந்திரக் கட்சியை அமைத்தனர். அதில் ஸ்ரீ நாராயணசுவாமி சிரத்தை காட்டினார். அதன் சென்னை ராஜ்யப் பொக்கிஷதாரராகவும் இருந்து வருகிறார்.

## மனிதாபிமானம்

தொழில் துறையில் பிரபலமடைந்து விட்டதால் ஸ்ரீ நாராயணசுவாமியின் மனிதாபிமானம் மாறிவிடவில்லை. அப்படிச் சிலர் நினைப்பது தவறு. சமுதாயத்தின் எல்லாப் பிரிவினரும் இணக்கமாகச் சேர்ந்து உழைத்து, நாட்டின் உற்பத்தியைப் பெருக்கிச் செல்வ நிலையை வளர்த்து, எல்லோரும் நிறை வாழ்வு நடத்த வேண்டும் என்பதுதான் அவரது ஆவல். வெறும் சித்தாந்தக் கண்ணோட்டம் அதற்கு உதவாது; பிரத்தியட்ச உணர்வுடன் கூடிய மனிதாபிமான ஒத்துழைப்புத்தான் தேவை என்று அவர் உறுதியாக நம்புகிறார்.

ஸ்ரீ நாராயணசுவாமி நமது பரந்தநாட்டை நன்கு அறிந்தவர். தொழில் வர்த்தகத் துறைகளில் அவரை அறியாதார் இல்லை. ஐரோப்பாவுக்கும் அமெரிக்காவுக்கும் ஜப்பானுக்கும் அண்மையில் சென்று வந்து, அங்குள்ள தொழில்கள், வாணிப நிலவரம், மக்கள் நல்வாழ்வை நாடிச் செயல்படும் விதம் ஆகியவற்றை நன்கறிந்தவர். 1961ல் மேற்கு ஜெர்மனிக்கும் பிரிட்டனுக்கும் சென்று வந்தார். இந்த விஜயத்தின் விளைவாக இரண்டு பெரிய தொழில்கள் அந்நியக் கூட்டுறவுடன் கூட நமது ராஜ்யத்தில் ஏற்பட்டு விரிவு காண்பது சாத்தியமாயிற்று. 1963ல் மூன்று மாத காலம் அமெரிக்காவில் தங்கிப் பன்னிரண்டு சர்வகலாசாலைகளுக்கும் பல தொழில் நிறுவனங்களுக்கும் சென்று ஆழ்ந்த புது அனுபவங்களை அடைந்தார். திரும்புகாலில் ஜப்பானில் சிறு தொழில்களின் வளர்ச்சிப் பிரச்னைகளை நேரில் கண்டறிந்து திரும்பினார்.

ஸ்ரீமதி விசாலாட்சி நாராயணசுவாமி ஐரோப்பாவெங்கும் பன்முறை சென்று வந்தவர். சோவியத் யூனியனுக்கு இருமுறை விஜயம் செய்தார். அவரைப் பார்த்துப் பேசுகிறவர்கள் இதை நம்ப மாட்டார்கள். நம் நாட்டுப் பண்புகளும், கலாசாரங்களும், நவீன உலகின் தேவைகளைக் கருத்திற்கொண்ட நெகிழ்ச்சியும் அவரிடம் குடிகொண்டிருப்பதைக் காணலாம்.

ஸ்ரீ நாராயணசுவாமியின் மூத்த புதல்வர் ஸ்ரீதர் அவருடன் கூடச் சித்ரா அண்ட் கம்பெனியில் உழைத்து வருகிறார்.

நாராயணசுவாமி தம்பதியின் நட்புறவு மிக விரிவானது. கேரளம், மைசூர் சம்ஸ்தானங்களின் இரண்டு மகாராஜாக்களின் நன்மதிப்பைப் பெற்றவர்கள். காலஞ்சென்ற ரைட் ஆனரபிள் வி. எஸ். ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள், ஸ்ரீ டி. ஆர். வெங்கடராம சாஸ்திரிகள் ஆகியோருடனும் டாக்டர் ஸி. பி. ராமசுவாமி அய்யரவர்களுடனும் பணிபுரிந்து அவர்களின் அன்பைப் பெற்றவர் ஸ்ரீ நாராயணசுவாமி. சர்வ கலாசாலை உபஅத்யட்சகர்கள் அவரது நண்பர்கள். பிரமுகர் பலரின் மதிப்பைப் பெற்றுள்ள இத்தம்பதி அதே சமயத்தில் அடக்கமாக ஏழைகளின் துயரைத் துடைக்க உதவி வருவதன் மூலம் சென்னை கழிசேரி வாழ் மக்களின் அபிமானத்தையும் பெற்றுள்ளனர். வாழ்க்கைப் போராட்டத்தில் தத்தளித்து அனுகும் குமாஸ்தாக்களான ஏழைகளிடமும் பரிவாதை காட்டி, அவர்களைக் கைதூக்கி விடுகிறார் ஸ்ரீ நாராயணசுவாமி. அவரை நாடி நன்மை அடைந்த தொழிலதிபர்கள், பணக்காரர்கள் நிறைய இருக்கலாம். அவரது உதவியின்காரணமாகத் துயர் குறைந்து வாழ்க்கை சிறிது வளமடைந்த ஏழைகளும் எண்ணற்றவர்கள். எல்லோருமாகச் சேர்ந்து அவரையும் அவரது மனைவியையும் மூன்று புதல்வர்களையும் அவரது அறுபதாண்டு நிறைவின்போது மனமார வாழ்த்துவர்.




"நந்தா உனக்கிந்த மதி
தந்த தாரடா!"

— கோபாலகிருஷ்ண பாரதி
(நந்தனார் சரித்திரக் கீர்த்தனைகள்)

கோபாலகிருஷ்ண பாரதியார் இப்போது உயிருடனிருந்து மத்திய அரசாங்க உள்நாட்டு மந்திரி நந்தா சரித்திரக் கீர்த்தனைகள் எழுதினால் அதில் மேலேயுள்ளது போன்ற பாட்டு வரிகள் இடம் பெற்றிருக்கும். ஸ்ரீ நந்தா, ஒரிஸ்ஸா ராஜ்ய மாஜிப் பிரதமர்களின் லஞ்ச ஊழல்கள் சோதனை பற்றிய அறிக்கையை அழகாக மெழுகி விட்டதைப் பற்றிப் பாரதி இப்படிப் பாடியிருப்பார். இந்த மதியை மந்திரி சபை சேரியினர் தந்ததாக ஸ்ரீ நந்தா சொல்லக் கூடும்.

ஃ ஃ ஃ

பெரிய இடங்களில் லஞ்சம் வாங்குவது, கொடுப்பது இது பற்றிய விசித்திர விவரங்களைத் தெரிந்து கொள்ளப் பலர் ஆவலுடன் துடித்துக் கொண்டிருப்பார்கள். அந்த ரகசியம் சென்ற வாரம் வெளியாயிற்று. பஞ்சாப் கல்வி மந்திரி ஸ்ரீ பிரபோத சந்திரா ஒரு பெண்கள் கல்லூரியில் பேசுகையில் கூறினார்:

"சென்ற வருடம் மதுபானக் கடைகள் குத்தகைக்கு விடுவதை ரத்து செய்வதாக இருந்தது. இது சம்பந்தமாக ஒரு பெரிய கலால் கண்டிராக்டர் என்னைப் பார்க்க வந்தார். குத்தகை விடுவதை ரத்து செய்யாதிருந்தால் 25 லட்சம் ரூபாய்கள் கொடுப்பதாகச் சொன்னார்...."

இப்படிப் பெருமை பீற்றிக் கொண்ட மந்திரி தாம் அந்தக் கண்டிராக்டர் மீது அவர் லஞ்சம் கொடுக்க முயன்றதாக ஏன் நடவடிக்கைகள் எடுக்கவில்லை என்பதைப் பற்றி ஒன்றும் தெரிவிக்கவில்லை. அந்தக் 'கண்டிராக்டர் கேவலம் 25 லட்சத்துக்குப் பதிலாக, 50 லட்சமோ 75 லட்சமோ கொடுக்க முன் வந்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்பதைப் பற்றி மற்றவர்கள் ஊகித்துக் கொள்ளும்படி விட்டு விடுகிறேன்.



ஃ ஃ ஃ

சென்ற வாரம் லோக சபையில் புடவை தரிசன விழா நடந்தது. ஒரு டாக்டரும் மக்களின் பிரதிநிதியுமான ஸ்ரீ லோஹியா, பச்சை நிறப் பூக்களை அச்சடித்திருந்த வெண்மையான ஒரு புடவையைக் கொண்டு வந்து சபாநாயகரிடம் காட்டி விட்டு, மற்ற அங்கத்தினர்களிடம் கொடுத்தார். அரசாங்கக் கடையில் வாங்கியதாகச் சொல்லப்பட்ட அந்தப் புடவை கிழிந்திருந்ததாம். புடவையை மற்ற மக்கள் பிரதிநிதிகள் சிலரும் பார்த்து விட்டுச் சபாநாயகர் முன் கீழே வீசி எறிந்தார்களாம்.



ஃ ஃ ஃ

ஸ்ரீ லோஹியா புடவையோடு நிற்கவில்லை; ஒரு மருந்து பாட்டிலும் கொண்டு வந்தார். அதில் கலப்படம் செய்யப்பட்டிருந்ததாம்.

சென்ற வருடம் ஒருவர் அரசாங்கப் பால் பண்ணை பாலில் ஈ இருந்ததைக் கொண்டு வந்து காண்பித்தார். இன்னொருவர், யமுனா நதியின் தண்ணீர் நிரம்பிய பாட்டிலைக் கொண்டு வந்தார்.

ராஜ்ய சட்டசபைகளின் அங்கத்தினரும் இது விஷயத்தில் பின்னடையவில்லை. சென்னை சட்ட சபையில் ஓர் அங்கத்தினர் கடைகளில் விற்கப்பட்ட மக்கிப் போன புழுத்த அரிசியைக் கொஞ்சம் மாதிரிக்குக் கொண்டு வந்து காண்பித்தார்.

சட்ட சபைகளில் காண்பிக்கப்படும் இத்தகைய சாமான்களையெல்லாம் சேர்த்து ஒரு பொருட்காட்சி வைத்தால் என்ன?

* * *

இந்தப் பொருட்காட்சி அம்சத்தை அபிவிருத்தி செய்து, திட்டத்தில் சேர்க்கலாம்.

இந்தியாவிலுள்ள 40,000 டிரக் வண்டிகளுள் 20,000க்குச் சில்லறை இயந்திர பாகங்கள் கிடைக்கவில்லையாம். ''ஆகையால் அவை சோம்பேறித்தனமாய்ப் படுத்திருக்கின்றன'' என்று ஒரு பத்திரிகையில் தகவல் வெளியாகியிருக்கிறது.

பாட்னு வைத்தியசாலையில் உபயோகத்துக்காக ஓர் எக்ஸ்ரே இயந்திரம் வாங்கினார்கள். வாங்கிய பிறகுதான் அதை அமைக்கத் தகுதியான ஒரு கட்டடம் இல்லை என்று தெரிய வந்தது. உடனே ஒரு கட்டடம் கட்டினார்கள். பிறகு எக்ஸ்ரே இயந்திரம் அதில் இரகப் பிரவேசம் செய்வதற்கான ஏற்பாடுகள் செய்து விட்டு அதவிடம் வந்து பார்த்தபோது அதில் உள்ள பல பாகங்கள் மாயமாய் மறைந்திருந்தன. அந்த இயந்திரம் அனுப்பிய கம்பெனியைப் பாகங்கள் வேண்டுமென்று கேட்டபோது, அது இல்லை என்று சொல்லி விட்டது. ஆகையால் இயந்திரம் தெய்வமே என்றிருக்கிறது.

அரசாங்கக் கணக்குத் தணிக்கை கமிட்டியின் ரிப்போர்ட்களிலிருந்து இது போன்ற பல ருசிகரமான சம்பவங்கள் சம்பந்தப்பட்ட சாமான்கள் இருப்பது தெரிய வரும். இவற்றை யெல்லாம் சேர்த்து ஒரு பெரிய கண்காட்சிச் சாலை வைக்கலாம். தப்பித் தவறி மறந்துவிடப் போகிறார்கள். இந்தக் கண்காட்சித் திறப்பு விழா ஒன்று நடத்த வேண்டும்.

* * *

தேசத்தைச் சுற்றிப் பார்க்க வரும் அயல் நாட்டுப் பிரயாணிகள், தஞ்சாவூர் கோயிலையும், மகாபலிபுரத்தையும், தாஜ்மஹாலையும், அஜந்தா குகைகளையும் பார்த்து வியப்படையலாம். ஆனால் கட்டாயம் சிரிக்கவே மாட்டார்கள். அவர்களுக்குச் சிரிப்பு ஏற்படும்படியான கட்டடங்களாகக் காண்பிக்க ஏற்பாடு செய்தால் ஏராளமான பிரயாணிகள் வருவார்கள். உதாரணத்துக்கு ஒரு யோசனை சொல்கிறேன்:

பவநகரில் அரசாங்கத்துக்குச் சொந்தமான ஒரு கட்டடம் இருக்கிறது. இதில் சூரிய சந்திரர் வாசம் செய்து வருகிறார்கள். அதாவது அதற்கு மேல் கூரை கிடையாது. கீழே தரையும் வெறும் மண் தரை. ஆனால் அரசாங்கக் கட்டடமல்லவா, இதை ஒரு காவற்காரர் மாதம் சுமார் 60,70 ரூபாய் சம்பளம் மட்டுமே வாங்கிக் கொண்டு காவல் காத்து வருகிறார். அவர் சென்ற பதினைந்து வருட காலமாக இந்தக் காவற் பணி புரிந்து வருகிறார்.

இந்தக் கூரையில்லா வீட்டை விற்று விடப் போவதாகக் குஜராத் ராஜ்யத்தினர் பயமுறுத்துகிறார்கள். அதைப் பற்றி 1964ம் ஆண்டு டிஸம்பர் மாதத்திலே தீவிரமாக யோசனை செய்யத்தொடங்கிவிட்டார்களாம்! இந்த வீட்டை ஒரு கண் காட்சிக் கட்டடமாகக் காட்டலாமே!

* * *

ஒரு நாள் பிரம்மதேவன் தமது அந்தப்புரத்துக்கு வந்த போது தர்மபத்தினியான தேவி ஸரஸ்வதியின் முகத்தில் கவலையும் கோபமும் குடியிருக்கக் கண்டார். அப்படியிருப்பானேன் என்று கேட்டார். ''சிவபெருமானுக்கு வில்வம் என்ற பத்திரம் இருக்கிறது. உங்களுக்கு அதுபோன்று ஒன்றுமில்லை. எல்லாரும் எள்ளி நகையாடுகிறார்கள். எனக்கு வெளியில் தலைகாட்ட முடியவில்லை!'' என்று கலாதேவி கண் கலங்கக் கூறினாள். அதைக் கேட்டுச்சிருஷ்டிகர்த்தன் சிரித்து, ''எல்லாவற்றையும் பிறப்பிக்கும் எனக்கு இதுதானா பிரமாதம்?'' என்று கூறி மேக மண்டலத்தைப் பார்த்தார். உடனே புகைமண்டலம் அவர் பக்கம் வந்தது. அந்தப் புகையிலிருந்து இலை மாதிரி ஒன்றை இழுத்தார். அதுதான் பிரம்ம பத்திரம் என்பது — சாட்சாத் புகையிலை.

இப்படிக் கதாகாலட்சேப குஞ்சரங்களும், புகையிலை உபயோகிக்கும் பக்தகோடிகளும் சொல்கிறார்கள். இந்தக் கதையைப் பலர் கேட்டிருக்கக் கூடும்.

ஆனால் பலர் கேட்டிருக்க முடியாத, இன்னொரு இலையைப் பற்றிய கதையைச் சொல்கிறேன் :

'' நூற்றுக்கணக்கான வருடங்களுக்கு முன்னர் தமோ என்ற ஓர் இந்திய பிக்ஷு இருந்தார். ஞானோதயம் பெற்ற புத்த பகவானின் உபதேசத்தைச் சீனாவில் பிரசாரம் செய்ய அவர் இந்தியாவிலிருந்து புறப்பட்டார். பீக்கிங் போய்ச் சேர்ந்ததும் அவர் பிரார்த்தனைகளை முடிப்பதற்கு முன் தூங்குவதில்லை என்ற விரதத்தை எடுத்துக் கொண்டார். ஆனால் அவர் தியானத்தில் இருந்தபோது களைத்துப் போனார். அவரது கண் இமைகள் மூடின. விழித்துக் கொண்டபோது அவர் வெறுப்படைந்தார். என்ன ஆச்சரியம்! அந்தக் கண் இமைகள் விழுந்த இடத்தில் ஒரு பைந்தருவின் புதர் ஓங்கி எழுந்தது. ஆச்சரியமடைந்த தமோ அந்த இலைகளைப் பறித்தார். தண்ணீரில் போட்டுக் காய்ச்சினார். அந்த நீரைக் குடித்தார். உடனே களைப்பு நீங்கி அவர் உற்சாகமடைந்தார். அவரது தியானத்தைத் தொடர்ந்து நடத்த முடிந்தது. ஜப்பானியப் புராணக் கதை, அதுதான் தேயிலை என்று கூறுகிறது.''

இந்திய டீ போர்டின் பிரசார விளம்பரத்தில் இந்த விவரங்களைத் தந்திருக்கிறார்கள். அரிசிப் பஞ்சம் ஏற்பட்டால் கோதுமையை உபயோகிக்கச் சொல்கிறார்கள் அல்லவா? அதே போல் காப்பிக் கொட்டைப் பஞ்சம் ஏற்பட்டிருக்கும் இந்தக் காலத்தில் காப்பிக்குப் பதில் டீயையே உபயோகிக்கும்படி டீ போர்டார் பிரசாரம் செய்யலாமே? அப்படி அவர்கள் செய்தால் காப்பிக் கொட்டை பிரசார போர்டார் ஒரு காப்பிக் கொட்டை ரிஷியைப் பற்றிய கதையைக் கண்டு பிடித்துச் சொல்வார்கள். கேட்க ருசிகரமாயிருக்கும்!

— என். ஆர்.

# தூங்குங்கள் பார்க்கலாம்!

சாமுவேல் ஆசீர்வாதம்

திண்டுக்கல்லிலிருந்து மதுரைக்குப் புறப்படும் எக்ஸ்பிரஸ் பஸ், நிலையத்தில் நின்று கொண்டிருந்தது. ஒரு டிக்கட் கிடைக்குமா என்று கேட்டேன். 'எல்லாம் புக்ட்' என்றார் ஒரு சிப்பந்தி. ''ஆர்டினரி ஒன்று கால் மணி நேரம் முந்திப் புறப்படுகிறது. அதிலே போகிறீர்களா?'' என்று ஆறுதலாகக் கேட்டார். பரவாயில்லை என்று ஏறினேன். பாதி வண்டி காலியாக இருந்தது. கையையும் காலையும் நீட்டிச் சௌகரியமாகப் போகலாம் என்று எக்ஸ்பிரஸில் இடம் கிடைக்காத ஏமாற்றத்தைக் குறைக்கத் துணிந்தேன்.

முதல் ஸ்டாப் நாகல் நகர். சுமார் எட்டுப் பேர் ஏறினார்கள். முதலில் ஏறிய ஆசாமி காலியான ஆசனங்களை எட்டியும் பாராமல் என்னை உரசிக்கொண்டு உட்கார்ந்தார். காலியான முன் ஆசனத்துக்குப் போன இன்னொருவரையும் ''இங்கே இடமிருக்கிறது, வாருங்கள்'' என்று கூப்பிட்டு உட்கார வைத்தார். ''அங்கே நிறைய இடமிருக்கிறதே'' என்று முணுமுணுத்தேன். ''இறங்குவதற்குச் சௌகரியமா யிருக்குமல்லவா?'' என்று என்னைப் பார்த்துப் புன்முறுவல் பூத்தார். ''சின்னாளப்பட்டியிலே இறங்குகிறீர்களோ?'' என்று கேட்டேன். ''இல்லே சார்! மதுரைக்குப் போகிறோம்'' என்று சொன்னார். ''சரிதான், நிரந்தர நெருக்கம்தான்'' என்று முணுமுணுத்தேன். ''ஐயா என்னமோ சொல்றீங்களே'' என்றார் அவருடைய நண்பர். ''நானும் மதுரைக்குத்தான்'' என்று விளக்கினேன். ''ரொம்ப சந்தோஷம்'' என்றார் அவர். என்ன சந்தோஷம்என்று கேட்க நினைத்தேன். ஆனால் கேட்கவில்லை.

அடுத்த ஸ்டாப் பேகம்பூர். திரளாகக் கூட்டம்காத்திருந்தது. கண்டக்டர் ஒவ்வொருவராக ஆளை அனுப்பிக் கொண்டிருக்க ''முன்னால் இடமிருக்கிறது போங்கள்'' என்று நாங்கள் மாறி மாறிப் பிரயாணிகளுக்கு வழிகாட்டிக் கொண்டிருந்தோம். ஒரு பையன் ஏறி வந்தான். ''தம்பி, இங்கே வா, இடமிருக்கிறது' என்று அவனை வருந்தி அழைத்தேன். அவன் முழு டிக்கட் என்று எனக்குத் தெரியும். அவனுக்கு டிரைவர் பக்கத்தில் உட்கார ஆசை போலும். எங்களைத் தாண்டிப் போய்விட்டான். ஒரு கனத்த ஆள் ஏறி வந்தார். எனக்கு முன்னும் பின்னும் உள்ள இரண்டு ஆசனங்களில் ஒவ்வோர் இடம் காலியாக இருந்தது. கனத்த மனிதர் ஒரு கணம் நின்று திகைத்தார். யார் பேரில் சீட்டு விழுமோ என்று பார்த்துக் கொண்டிருந்தேன். அவர் என்னை முறைத்துப் பார்த்தார். என்னையறியாமல் என் முகத்தில் அழைப்புப் புன்முறுவல் தோன்றிற்றோ என்னவோ?

பஸ் புறப்பட்டது. கனத்த மனிதர் என் பக்கத்தில்தான் இருந்தார். ஆசனத்தில் நாலில் ஒரு பங்கு இடத்தை ஒவ்வொருவரும் அடைக்கிறார்களோ என்ற ஆராய்ச்சியில் சுமார் பத்து நிமிஷங்களாக ஈடுபட்டேன். நிரந்தரமாக ஐந்திலொரு பங்குதான் எனக்கு ஒதுக்கப்பட்டது போல் எனக்குத் தோன்றிற்று. வண்டி வலது பக்கம் திரும்பும் போதெல்லாம் கனத்த மனிதர் என் பங்கில் ஓர் அங்குலத்தை ஆக்கிரமித்தார். வண்டி இடது பக்கம் திரும்பும்போதெல்லாம், சீனாக்காரன் போல அக்கிரமித்த பகுதியை விட்டுவிடாமல் பாதுகாக்க அவருடைய உடற் பருமன் உதவிற்று. மேலும் அவருக்கு இடது பக்கத்தில் இருந்தவர் பாகிஸ்தான் போல, ''அவருக்கு விட்டுக் கொடுக்காதே'' என்று அண்டைக் கொடுக்கிறாரோ என்ற சந்தேகமும் உண்டாயிற்று. வண்டி சின்னாளப்பட்டியில் வந்து நின்றது. கனத்த மனிதர் சற்று அசைந்து கொடுத்தார். ''இங்கே இறங்குகிறீர்களா?'' என்று அவருடன் கேட்டேன். ''இல்லே சார், மதுரைக்குப் போகணும்'' என்றார் அவர். கடைசி நம்பிக்கையையும் இழந்தேன்!

பஸ் மறுபடியும் புறப்பட்டது. அடுத்த ஒரு மைல் தூரத்துக்கு ஆசனத்தின் சாய்மானத்தில் யாருடைய முதுகு படிவது என்ற போட்டி எனக்கும் கனத்த மனிதருக்கும் நடந்தேறியது. வண்டியின் ஆட்டமும் இருப்பமும் ஆசாமியின் பளுவும் அவருடன் சேர்ந்து என்னுடன் போட்டியிட்டன. எனக்குத்தான் தோல்வி. சுமார் நான்கு அங்குலம் முன்னால் நகர்ந்து உட்கார்ந்தேன். கனத்த மனிதர் நன்றாகச் சாய்ந்து கொண்டார். வண்டி இடது பக்கம் திரும்பும் போதெல்லாம் என் ஆசை தீர அவர் மேல் சாய்ந்துகொண்டு நான்கு தடவை பழி வாங்கினேன்! என்னுடைய தாக்குதலை அவர் சற்றேனும் சட்டை பண்ணவில்லை என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது; ஆசாமியைத் திரும்பிப் பார்த்தேன். கண்களை மூடித் தூங்க ஆரம்பித்து விட்டார். வண்டி வேகமாகப் பறந்தது. பையிலிருந்த 'தினசரி வம்பன்' பத்திரிகையைப் பிரித்துப் படிக்க





ஆரம்பித்தேன். பின்னால் இருந்த ஒருவர் 'சார்! ஒரு தாளைத் தருகிறீர்களா?' என்று கேட்டார். இருந்ததே ஒரு தாள்தான். எனக்கு வந்த எரிச்சலிலே பத்திரிகையைப் பாதியாகக் கிழித்து ஒரு பாதியைக் கொடுத்தேன். ''சார், கிழிக்க வேண்டாம்'' என்று மரியாதைக்குக்கூட ஒரு வார்த்தை சொல்லவில்லை அந்த மனுஷன். வாங்கிக் கொண்டார். அவருக்குப் பக்கத்திலிருந்தவர் என்னைப் பார்த்த பார்வை 'எனக்குப் பாதி கிடையாதா?' என்று கேட்பது போல் தோன்றியது. மீதிப் பாதியை அவர் கையில் திணித்து விட்டுத் திரும்பி உட்கார்ந்து பற்களைக் கடித்துக் கொண்டேன். பத்திரிகையை வாங்கினவனுக்கு வண்டிக்குள் அதைப் படிக்க உரிமை கிடையாது. வாங்கினவன்தான் வீட்டிலே சாவதானமாகப் படிக்கலாமே என்பது மற்றப் பிரயாணிகளின் திடமான அபிப்பிராயம் போலும்! இந்தச் சிந்தனையில் மூழ்கி யிருக்கையில் கனத்த மனிதர் தம் தலையால் என் தோளை ஓர் இடி இடித்தார். வண்டி வலப்பக்கம் திரும்புகிற சமயம் பார்த்து மனிதன் பழிவாங்க ஆரம்பித்து விட்டாரோ என்று நினைத்தேன். வண்டி நேராகத்தான் போய்க் கொண்டிருந்தது. மறுபடியும் ஓர் இடி கொடுத்தார். திரும்பிப் பார்த்தேன். மனுஷனுக்கு அயர்ந்த தூக்கம். சாய்மானத்தைவிட்டு இடம் பெயர்ந்து நின்ற அவருடைய தலை ஒரு விநாடிக்கு ஒரு முறை என் இடது தோளைத் தாக்குகிற வேலையில் ஈடுபட்டிருந்தது. தாக்குதலின் வேகம் வர வர அதிகரித்தது. ஒன்று, இரண்டு என்று எண்ணிக்கொண்டு ஏழு என்று சொல்லி முடிப்பதற்குள் அடுத்த இடிவிழும். கடிகாரம் கெட்டது போங்கள்! கடிகாரப் பெண்டுலம் மையத்திலிருந்து இரு பக்கமும் ஆடும். கனத்த மனிதருடைய தலைப் பெண்டுலத்துக்கு இடப் பக்க வாதம் போலும்! வலப் பக்கமிருந்த என் தோளைத்தான் அவருடைய தலை பதம் பார்த்ததே தவிர முதலில் வந்த இரட்டையர்களில் ஒருவரை ஒன்றும் செய்யவில்லை. உபத்திரவம் கொடுத்தால், அதை வலப் பக்கமும், இடப் பக்கமும் ஐம்பது சதவிகிதம் பகிர்ந்து கொடுப்பதல்லவோ நியாயம்! இந்தச் செயலுக்கு ஒரு பாடம் கற்பித்துத் தானாக வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேனோ, இல்லையோ, ''வேண்டாம், தம்பி!'' என்று சொல்வது போல் என் தோள் பட்டையில் ஓர் இடி விழுந்தது. ஒன்று, இரண்டு, மூன்று, நாலு என்று எண்ண ஆரம்பித்தேன். ஏழு என்றதும் பளிச்சென்று ஆறங்குலம் முன்னால் நகர்ந்து உட்கார்ந்தேன். மறு கணம் என் முதுகுக்கும் சாய்மானத்துக்கும் இடையே குடாலென அவருடைய தலை விழுந்து சிக்கிக் கொண்டது. பக்கத்துச் சீட்டிலிருந்த ஒருவர் சிரிப்பை அடக்க முடியாமல் தவித்தார். இரட்டையர்களில் ஒருவர் ''இது என்ன தூக்கம்?'' என்று உறுமினார். அடுத்தவர் நண்பருடைய எரிச்சலை ஆமோதிக்கிறவர் போல, தூக்க மயக்கத்தில் தம் தலையால் முழங்காலை முட்டிக் கொண்டிருந்தார். கனத்த மனிதர் என்னை இடக் கரத்தால் பிடித்து எழுந்தார். ''எக்ஸ்க்யூமீ! பழனியிலே நேற்றும் முந்தின நாளும் இரவெல்லாம் விழிப்பு'' என்றார்.

என் மனம் என்னை வாதிக்க ஆரம்பித்தது. வண்டியின் வேகத்துக்கு ஏற்ப என் நெஞ்சு படபடத்தது. அவரை என் மடியில் படுக்க வைத்துத் தாலாட்டுப் பாடினாலொழிய என் மனம் சாந்தியடையாது என்ற நிலைக்கு வந்து விட்டேன். ''சார்! படுத்துக் கொள்கிறீர்களா?'' என்று கேட்டிருப்பேன். ''படுக்காமல் தூங்கிக் கொள்கிறேன்'' என்பது போல் மறுபடியும் நிஷ்டையில் ஆழ்ந்து விட்டார். ஏழு எண்ணியதும் பின்னால் நகர்ந்து அவருடைய தலையை என் மடியில் வாங்கிக்கொள்ளத் தயாரானேன். ''ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டு ஒன்றாகும்'' என்று சும்மாவா பாடினார்கள்? அவருடைய தலை மடியில் விழவில்லை. காரணம் என்ன என்று எட்டிப் பார்த்தேன். காரியம் விளங்கிற்று. இரட்டையர்களில் ஒருவரை அவருடைய தலை தாக்க ஆரம்பித்து விட்டது. ''இது என்ன தூக்கம்?'' என்று அவர் சீறி விழுந்திருப்பார். ஆனால் அவரும் தூக்க வெறியில் தம் நண்பரைத் தாக்க ஆரம்பித்து விட்டார். நண்பரோ பழையபடி முப்புற மோதுதலில் முனைந்திருந்தார். நான் எண்ண ஆரம்பித்தேன். ஏழு என்றதும் கனத்த மனிதரின் இடப்புறத் தாக்குதல். எட்டு என்றதும் இரட்டையர்களில் ஒருவருடைய வீழ்ச்சி. ஒன்பது என்றதும் நண்பரின் ஆமோதிப்பு. இந்தக் கண்கொள்ளாக் காட்சியைப் பார்த்து ரசித்துக்கொண்டே இருந்தேன். நான்கு முறையாக மூவரின் தூக்க நாடகத்தைக் கண்டு களித்தேன். ஐந்தாம் முறையாக இக்காட்சியைக் காண முடியவில்லை. ஏனெனில், என் தலை ஆசனத்தின் சாய்மானத்தைத் தாக்க ஆரம்பித்து விட்டது!

இந்தியா முழுவதிலிருந்தும் தாமாகவே தேடிவந்த நற்சாட்சிக் கடிதங்கள் கூறுகின்றன:

# போர்ஹான்ஸ் பற்பசை ஈறு உபாதைகளை நிறுத்தி, பற்சிதைவைத் தடுக்கிறது

ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் ஆற்றும் போர்ஹான்ஸ் பற்பசையின் நன்மைகளை எல்லா வயதினரும் போற்றுகின்றனர்.

## அவர்கள் கூறுவதைப் படித்துப் பாருங்களேன்:

''இன்று என் பற்களுக்கு உள்ள ஒளிமயமான வெண்மை, நெடுங்காலமாக நான் உபயோகித்து வரும் போர்ஹான்ஸ் பற்பசையினால்தான். வெற்றிலையும் புகையிலையும் போடப் பழகிவிட்ட 27 வயது இளைஞன் நான். உங்களுக்குத் தெரியும், புகையிலை போடுவதனால் பற்களில் காவிக் கறையேறிவிடுகிறது. ஆயினும், போர்ஹான்ஸ் பற்பசை செய்திட்ட மாயம், கறைகள் யாவுமே அகன்று, பற்கள் வெண்மை மயமாகப் பளிச்சிடுகின்றன''

பி.பி., பெங்களூர்.

''உங்கள் போர்ஹான்ஸ் பற்பசை உபயோகித்ததின் பயனாக, கொடும் ஈறு உபாதைகளினின்று நான் குணமடைந்தது பற்றி உங்களுக்குக் கூறக் கடமைப்பட்டுள்ளேன். தவறாமல் இப்போதெல்லாம் நான் போர்ஹான்ஸ் தேய்த்துவரும் காரணத்தினால், அடிக்கடி என்னை வருத்திய ஈறு நோவு, ஈறு அழற்சி, வாய் நாற்றம் ஆகியவற்றினின்று விடுபட்டிருக்கிறேன். இறைவன் அருள் பெற்று நீடூழி ஓங்குக போர்ஹான்ஸ் என்று போற்ற விரும்புகிறேன்''

ஹெச். ஆர். எஸ்., பம்பாய்

''இளமை தொட்டே நான் போர்ஹான்ஸ் பற்பசை உபயோகித்து வருகிறேன். என் குடும்பத்தினருக்கும் அதுவே பழக்கம். பற்களை வெண்மை ஒளியுடனும், ஈறுகளை திடமான ஆரோக்கியத்துடனும் வைத்துக்கொள்ள எங்களுக்கு அதுவே உறுதுணையென உணர்ந்துள்ளோம்''

(திருமதி) கே.வி., பெங்களூர்

*இந் நற்சாட்சிக் கடிதங்களை ஜாப்ரே மானேர்ஸ் & கோ. லிட். கம்பெனியாரின் எந்த ஆபீஸிலும் காணலாம்.




**போர்ஹான்ஸ்:** பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பெற்ற பற்பசை

இலவசம்! ''CARE OF THE TEETH AND GUMS'' என்ற ஆங்கில வண்ண நூல். பற்களின் பராமரிப்பு முறையைப் படங்களோடு விளக்கும் இப் புத்தகத்தைப் பெற விரும்புவீர்களாயின், (தபால் செலவுக்காக) 10 பைசா தபால் வில்லைகளை அனுப்புங்கள்: டிபார்ட்மெண்ட் K.6. மானேர்ஸ் டெண்ட்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை நம்பர் 10031, பம்பாய் 1.

பெயர்..........................................................

விலாசம்......................................................

மேற்கிந்தியத் தீவு பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர் ஹண்ட் எம். ஆர். ஏ. குழுவினரோடு பங்களூருக்கு வந்திருந்தார். அந்தச் சமயத்தில் மைசூருக்கும் சென்னைக்கும் இளைஞர் கிரிக்கெட் பந்தயம் நடந்து கொண்டிருந்தது. அந்தக் கிரிக்கெட் ஆட்டத்தைப் பார்வையிட்ட ஹண்டை வேங்கடராகவனின் ஆட்டம் கவர்ந்து விட்டது. ''இந்த இளைஞருக்கு நல்ல ஆட்டத் திறமை இருக்கிறது. அதைச் சரிவரப் பயன்படுத்தினால் அவருக்கு நல்ல எதிர்காலம் உண்டு!'' என்று பாராட்டினார். அந்தப் பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரரின் வார்த்தை பொய்க்கவில்லை.

சந்திரசேகர் கையில் அடிபட்டுச் சென்னையில் நியூஸிலாந்து கோஷ்டிக்கு எதிராக டெஸ்டில் கலந்துகொள்ள முடியாமல் போகவே 'ரிஸர்வ்' வேங்கடராகவன் முதன் முதலில் சென்னை டெஸ்டில் இறங்கினார். அவர் பௌலிங் சிறப்பு படிப்படியாக அவ்வொரு டெஸ்டிலும் விருத்தியாகிக் கடைசி டெல்லி டெஸ்டில் அவரது பௌலிங் சாதனையினாலேயே இந்தியாவுக்கு மாபெரும் வெற்றியும், 'ரப்பரும்' கிட்டி விட்டன. முதல் இன்னிங்ஸில் எட்டு விக்கெட்டுகளையும் இரண்டாம் இன்னிங்ஸில் நான்கு விக்கெட்டுகளையும் அவர் வீழ்த்தியதைக் கண்டு நியூஸிலாந்து கோஷ்டியினரே அசந்து மூக்கின் மேல் விரலை வைத்தனர்.



மேல் படம்: அண்ணனுடனும், அன்னையுடனும் வேங்கடராகவன்

''இந்த மோர்க் குழம்பு விட்ட மீன் என்ன போடு போடுகிறது பார்த்தீர்களா?''— ஒரு ரஸிகர்.



# வெற்றிக்கு வழி வகுத்த வேங்கடராகவன்

வேங்கடராகவனுக்குக் கிரிக்கெட் ரத்தத்தோடு பிறந்தது என்றால் அது மிகையில்லை. பங்களூரில் எல். ஐ. ஸி.யில் பணி புரியும் வேங்கடராகவனின் தந்தை ஸ்ரீ ஸ்ரீனிவாசராகவன் சென்னை எம். ஆர். ஸி. யைப் கிரிக்கெட் ஆட்டக்காரர். அவரது சித்தப்பா வீரராகவன் கிரிக்கெட்டில் 'ஆல்ரௌண்டர்'. 'பாபாஜி' என்று செல்லப் பெயரிட்டு அழைக்கப்படும் வீரராகவன் பிடித்த அற்புதமான 'காச்' புச்சிபாபு ஞாபகார்த்த கிரிக்கெட் பந்தயத்தில் அவர்கள் கோஷ்டிக்கு வெற்றியைத் தேடித் தந்தது.

1945ம் வருஷம் ஏப்ரலில் சென்னையில் பிறந்த வேங்கடராகவன் பி. எஸ். ஹைஸ்கூலில் பள்ளிப் படிப்பை முடித்தார். பி. எஸ். ஹைஸ்கூலின் தலைசிறந்த பாட்ஸ்மேன் என்று புகழ் பெற்று பல வெற்றிகளைத் தேடித் தந்திருக்கிறார். கல்லூரிப் படிப்பை விவேகானந்தா கல்லூரியில் தொடர்ந்தார். கிரிக்கெட் ஆட்டமும் கல்வியைப் போலவே வளர்ந்தது. பிறகு இன்ஜினியரிங் கல்லூரியில்





சேர்ந்தபோதுதான் அவர் சர்வகலாசாலைகளுக்கான கிரிக்கெட் போட்டிகளில் கலந்துகொள்ளும் வாய்ப்புப் பெற்றார். ஹைதராபாத்தில் கிருபால் சிங்கோடு அவர் 'சத பார்ட்னர்ஷிப்' ஆடி எடுத்தது மறக்க முடியாதது. இலங்கையர் கோஸ்வாமியின் ஆறு விக்கெட்டுகளை ஐம்பத்தோரு ரன்களுக்குள் எடுத்ததே இவரது 'டெஸ்ட் செலக்ஷ'னுக்கு நற்சாட்சிப் பத்திரமாகத் திகழ்ந்தது.

டெஸ்ட் செலக்ஷனுக்குப் போய் விட்டு வந்த வேங்கடராகவனை வரவேற்க அவரது தாத்தா தேவராஜன் விமான நிலையத்துக்கு வந்திருந்தார். அந்தச் சமயத்தில் வேங்கடராகவனோடு செலக்ஷன் கமிட்டியில் ஒருவரான தத்தரேயும் வந்திருந்தார். வேங்கடராகவன் தம் தாத்தாவைத் தத்தரேக்கு அறிமுகப்படுத்தியபோது, ''அப்படியா? உங்களுக்கு முன்னால் ஓர் 'அட்வைஸ்' உங்கள் பேரனுக்குச் செய்ய வேண்டும். செய்யலாம்தானே? வருங் காலத்தில் சிறந்த ஆட்டக்காரராகத் திகழ அது ஒத்தாசை செய்யும்!'' என்றார் அவர்.

''என் பேரன் தன் வளர்ச்சிக்கு நீங்கள் என்ன சொன்னாலும் அதைக் கேட்டு நடப்பான்'' என்றார் தாத்தா.

''இப்பொழுது கிரிக்கெட் ஆட்டக்காரர்களில் சிலர் சகவாச தோஷத்தினால் மது அருந்தினால் ஆட்டம் முன்னேறும் என்ற தவறான அபிப்பிராயத்தைக் கொண்டு நடந்து வருகிறார்கள். இதனால் அவர்களது ஆட்டம் கொஞ்சம் கொஞ்சமாக மங்கி வருகிறது. இந்தப் பழக்கத்தை உங்கள்பேரன் கைக்கொள்ளாமல்பார்த்துக்கொள்ள வேண்டும்!'' என்று உணர்ச்சியோடு கூறினார் தத்தரே.

''எங்கள் பண்பாடும் குல வழக்கமும் இடம் கொடாது. என் பேரன் அந்த வழிக்குப் போக மாட்டான். எனக்கு நம்பிக்கையுண்டு. சென்னையில் ஒரு ரசிகர் 'இந்த மோர்க் குழம்பு விட்டமின் என்ன போடு போடுகிறது பார்த்தீர்களா?' என்று கூறினார். மோர்க் குழம்பு விட்டமின் அவனைக் காப்பாற்றும்!'' என்று அறுதியிட்டுச் சொன்னார் ரிடையர்டு போலீஸ் அதிகாரி ஸ்ரீ தேவராஜன்.

இன்ஜினியரிங் கல்லூரியில் வேங்கடராகவனைப் பற்றி மேலும் தெரிந்துகொள்ளச் சென்றிருந்தபோது, 'டிரான்ஸிஸ்டர்' ரேடியோக்களில் ஆவலுடன் பல மாணவர்கள் கடைசி நாள் ஆட்டத்தைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.



○ 'ஆப் ஸ்பின்னர்' பந்து வீசுகிறார். ○ ஸ்ரீ கல்யாணராமன் ○ ஸ்ரீ ஆனந்த ராவ் ○ சென்னை ராஜ்ய கிரிக்கெட் கோஷ்டியினர்

---

வேங்கடராகவன் விக்கெட்டை வீழ்த்திய சமயமெல்லாம் தாங்களே விக்கெட்டை வீழ்த்தியதாகப் பெருமையடைந்து கரகோஷ ஆரவாரமிட்டனர்.

அடுத்தாற்போல், பிரின்ஸிபால் ஸ்ரீ கல்யாணராமனைக்



காண அவர் அறைக்குள் நுழைந்தபோது, "வாருங்கள். வேங்கடராகவனால் பலருக்குப் பெருமை தேடி வருகிறது. வேங்கடராகவனால் அவனது தாத்தா தாம் பிரபல்ய மடைந்து விட்டதாகச் சொன்னார். எங்கள் கல்லூரியின் பெருமையையும் அவன் உயர்த்தி விட்டான்!" என்று மலர்ந்த முகத்துடன் கூறி வரவேற்றார்.

"வேங்கடராகவன் எங்கள் கல்லூரியில் மெக்கானிகல் பிரிவில் நான்காவது வருஷம் பயில்கிறான். படிப்பில் முதன்மையான மாணவனாகத் திகழ்கிறான். அடுத்த வருஷம் அவனுக்கு 'பைனல்' பரீட்சை. அயல் நாடுகளில் ஆட்டக்காரர்கள் படிப்பில்லாவிட்டாலும் காலம் கடத்திவிடலாம். நம் நாட்டில் படிப்பில்லாவிட்டால் பிழைப்பு ஓடாதே. கிரிக்கெட் ஆட்டத்தில் கிடைத்த இந்தப் பெரும் சிறப்பைப் போலவே இன்ஜினியரிங் படிப்பிலும் முதன்மையாகத் தேறி அவன் பெருமையடைய வேண்டும் என்பது என் அவா!" என்றார் இன்ஜினியரிங் கல்லூரி பிரின்ஸிபால் ஸ்ரீ கல்யாணராமன்.

வேங்கடராகவனோடு நாலு வருஷங்கள் நெருங்கின பழக்கம் கொண்ட பிஸிக்கல் டைரக்டர் காமராஜ், "ஸார்! வேங்கடராகவன் பல கிரிக்கெட் மாட்சுகளில் கலந்துகொள்ளும் வாய்ப்பிருப்பதற்காகக் கட்டாய என். ஸி. ஸி. டிரெயினிங்கிலிருந்து அவருக்கு விடுதலை வாங்கித் தந்திருக்கிறோம். 1964–65 ஜெயின் கல்லூரி தங்கக் கோப்பை எங்கள் கல்லூரிக்குக் கிடைக்க வேங்கடராகவன் ஆட்டம் உதவி செய்தது. பல மாட்சுகளில் வேங்கடராகவன் நல்ல 'பாட்ஸ்மென்' என்று பேர் வாங்கியிருக்கிறார். அவருக்கு 'ரன்' எடுக்க வேண்டும் என்ற ஆசை அதிகம். அந்த ஆசையில் எட்டு மாட்சுகள் நடந்தால் அதில் ஐந்து மாட்சுகளில் அவர் ரன் 'அவுட்' ஆகியிருப்பார். அடுத்த வருஷம் சர்வ கலாசாலை கிரிக்கெட் போட்டியில் எங்கள் கல்லூரிக்கு வெற்றி கிட்டும்; வேங்கடராகவனே கிரிக்கெட் காப்டனாகவும் இருப்பார்" என்றார்.

ஜான்ஸன் அந்தக் காலத்தில் பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரர். அவர் ஒரு சமயம் ஓர் ஆட்டத்தில் 'காச்'சைத் தவற விட்டுவிட்டார். அதைப் பற்றி எழுதிய 'ஹிந்து'ப் பத்திரிகை விளையாட்டு ஆசிரியர் திரு குருநாதன், "ஓர் இலேசான 'காச்'சை ஜான்ஸன் விட்டுவிட்டார்," என்று பத்திரிகையில் எழுதி விட்டார். எத்தனையோ தடவை ஜான்சனின் திறமையைப் பற்றி எழுதிய போதெல்லாம் திரு குருநாதனிடம் வராத ஜான்சன் இந்தக் குறையைப் பற்றி எழுதியதும் அவரிடம் வந்து, "ஆமாம்! அந்தக் 'காச்' இலேசானதென்று அவ்வளவு தூரத்தில் உள்ள உங்களுக்கு எப்படித் தெரியும்? இனிமேல் நன்றாகப் பார்த்து விட்டு எழுத வேண்டும்!" என்றாராம் கோபமாக.



"நான் இத்தனை நாட்கள் அப்படி எண்ணிய தில்லை. சரி! இனிமேல் உங்கள் மாட்சில் அம்பயருக்குப் பக்கத்தில் எனக்கு ஒரு ஸீட்டைப் போட்டு விடுங்கள்! அங்கே வந்து உட்கார்ந்து விடுகிறேன்!" என்று வேடிக்கையாகச் சொன்னாராம் திரு குருநாதன். அப்புறம் ஜான்சனின் முகத்தில் ஈயாடவில்லை.

"அகில இந்திய ரேடியோ இன்றைய கிரிக்கெட் டெஸ்ட் மாட்ச் ஆங்கில விமரிசனத்தைக் கேட்கலாம்!" என்றதும் கிரிக்கெட் விமரிசகர் ஆனந்தராவின் நினைவு வரும். முப்பது வருஷ காலமாக ரேடியோ கிரிக்கெட் விமரிசகரும், கிரிக்கெட் துறையில் முதிர்ந்தவருமான ஸ்ரீ ஆனந்தராவிடம் 'ஆப் ஸ்பின்னர்' வேங்கடராகவனைப் பற்றிய விமரிசனத்தைக் கேட்கலாம்:

"1932ம் வருஷத்திலிருந்து இந்திய கோஷ்டியில் சிறந்த 'ஆப் ஸ்பின்னரா'கத் திகழ்ந்தவர் ஹைதராபாத்தைச் சேர்ந்த குலாம் அகமது. இவருக்குப் பின்னால், பிரஸன்னா, கிருபால் சிங், 'ஆப் ஸ்பின்னர்'ராக வந்தனர். இவர்களில் தேர்ந்த பந்து வீச்சைக் காண முடியவில்லை. இப்பொழுது நமக்கு அருமையான 'ஆப் ஸ்பின்னர்' வேங்கடராகவன் கிடைத்திருக்கிறார். இளமையும், அவரது உயரமும் பந்து வீச்சுக்கு உறுதுணையாக இருக்கின்றன. மேலும், பந்தை லாகவமாகத் தூக்கி வீசுவதோடு பல கோணங்களிலும் விட்டெறிகிறார். அவரது திறமைக்கு டெல்லி டெஸ்ட் ஓர் எடுத்துக்காட்டாகும். பத்தொன்பதாவது பிராயத்திலேயே இத்தனை பெரிய சாதனையை நிகழ்த்தியது அவரது வருங்காலத்துக்கு நல்ல அஸ்திவாரமாகும். பௌலிங் அனுபவம் பெற்ற குலாம் அகமதிடமிருந்து இன்னும் பல அரிய 'டெக்னிக்'குகளைக் கற்றறிந்தாரானால் வேங்கடராகவன் பல வருஷங்கள் இந்தியாவுக்குப் பெருமை தேடித் தருவார். அதோடு இவரது பீல்டிங் திறமை இவரது பௌலிங் சிறப்புக்கு அழகூட்டுகிறது. வேங்கடராகவனுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது." வேங்கடராகவன் கிரிக்கெட் சரித்திரத்தில் இந்த டெல்லி டெஸ்ட் மாதிரி பல அபூர்வ சாதனைகளைச் செய்வார் என்று எதிர்பார்க்கிறோம்.

— குண்டுமணி




# ராஜயோகம் – 29

கதை: தம்பு ❋ சித்திரம்: செல்வம்










நான் என்ன சொல்லியும் அவர் கேட்கவில்லை. வரப் போகிறாராம். நம்மிடமிருக்கும் வியாதியஸ்தர்களுள் நாடகப் பைத்தியம் நாரதமுனியும், ஆராய்ச்சிப் பைத்தியம் பேராசிரியர் பொன்னையாவும் தான் உண்மைப் பைத்தியங்கள். யோகத்தை முறையாய் அழைத்துக்கொண்டு வந்தான். ராஜாவின் பொறுப்பு வக்கீலைச் சேர்ந்தது. சீதாமணியை நாம் பைத்தியமாக்கி வைத்திருக்கிறோம். வேறு டாக்டர் பரிட்சித்தால் ஆபத்து! மனோவசிய வேகம் குறைந்தால் உண்மையைச் சொல்லிவிடுவாள்.


ஆமாம்! எல்லாம் இந்த யோகத்தாலும், ராஜாவாலும் வந்தது. அவர்கள் என்ன செய்கிறார்களோ, தெரியவில்லை. போய்ப் பார்க்கலாம்.


யோகம்!
ராஜா!
நான் இதோ இருக்கிறேன், தேவகி! நான் தான் ராஜா!


யாரடா நீ! மோசக்காரப் பயல்!
நீ தான் மோசக்காரப் பயல்!


அந்த இரண்டு ராஜாக்களும் குஸ்தி போட்டுக் கொண்டிருக்கிறார்கள். அவர்களைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. இது நமது வைத்தியசாலை என்பதை மறந்து விடுவோம். இந்த முதல் பணம் போட்டதென்னவோ அந்த அயோக்கிய வக்கீல்! நாம் இதைவிட்டு வெளியேறிவிட வேண்டும்.


ஆமாம்! பாங்குமூட இன்னும் ஒருமணி நேரம் தான் இருக்கிறது. போதும் போது செக்கிறதுப் பணத்தை வாங்கிக் கொண்டு போக வேண்டும். அது மிகவும் முக்கியம். வாசல் பக்கம் ஏகசப்தமாயிருக்கிறதே. போய்ப் பார்த்துவிட்டு வருகிறேன்!




வாசலில் ஏராளமான ஜனங்கள் கூடியிருக்கிறார்கள். அந்த ஸினிமா நட்சத்திரம் சந்திரகுமாரி வருகிறாள் போலிருக்கிறது. அவளைத் தரிசிப்பதற்காக ஏனிமாய் வைத்தியர்கள் கூடியிருக்கின்றனர். கேட்டை உள் பக்கம் பூட்டச் சொல்லியிருக்கிறேன். நாம் சீக்கிரம் பாங்குக்குப் போக வேண்டும்.
பின் பக்கமாகப் போகலாம். வண்டியைக் கொண்டு வருகிறேன்!


டாக்டர் அம்மா, ஸார்! எங்களுக்குக் கொஞ்சம் வைத்தியம் செய்துவிட்டுப் போகலாம். உள்ளே திரும்பி வாருங்கள்!
தொடரும்.






# எட்டியிராத மைலோட்டத்தை எட்டியுள்ள டயர்.

## இதனை உருவாக்குவது பயர்ஸ்டோன் ஸூப்-ர்-டஃப்

**கூடுதலான மைலோட்டத் திறன்படைத்த அற்புத ரப்பர்**

இதோ இன்றே கிடைத்துவிட்டது சாலைய டயர்! பாதுகாப்பாக மோட்டாரோட்டுவதற்கென புரட்சிகரமான டிரெட் அமைப்புக்கொண்ட பயர்ஸ்டோன் நியூ டீலக்ஸ் சாம்பியன். அதோடு மட்டுமல்ல, அதிகப்படி செலவு ஏதுமின்றியே உபரி மைலோட்டம் கிடைப்பதற்கென ஸைப்-ர்-டஃப் என்ற அற்புத ரப்பரினால் தயாரிக்கப்பட்ட டயர் இது. தவிர, ஸைப்-ர்-டஃப் அதிக உறுதி வாய்ந்தது ஆதலால் பஞ்சர், தேய்வு, பிளவு எதுவும் நேரிடாமல் தாக்குப்பிடிக்கும் திண்மை உள்ளது.

**Firestone** பயர்ஸ்டோன் நியூ டீலக்ஸ் சாம்பியன்

மாலை மறைந்து இருள் கவியும் நேரம். குளிர் காலமானதினால் சீக்கிரமே இருட்டியும் விட்டது. அந்த ஏழு மணிக்குள், கோயிலி லிருந்து அவசரம் அவசரமாய் வீடு திரும்பிக் கொண்டிருந்தாள் சியாமளா. அவள் கண்கள் வழியில் கடைகளில் மின்சார விளக்கு ஒளியில் பளபளத்துக் கொண்டிருந்த வண்ண வண்ண பிளாஸ்டிக் நூல் கற்றைகள் மீதும் பிளாஸ்டிக் மணிகள் மீதும் பதிந்தன.

ஒரு கணம் கடை முன் நின்று தயங்கிய வள், சட்டென்று உள்ளே நுழைந்து பச்சை, மஞ்சள், சிவப்பு போன்ற நிறங்களில் இரண் டிரண்டு கட்டு பிளாஸ்டிக் நூல்களை வாங்கிக் கொண்டாள். 'எல்லாமாகச் சேர்ந்து நான்கு கூடைகள் பின்னலாம்' என்று எண்ணிய வாறே வீடு நோக்கிச் சென்றாள் படபடக்கும் நெஞ்சத்துடன்.

வீட்டினுள் நுழைந்ததும் 'டாண்' என்று ஒன்றடித்து மணி ஏழரை என்பதை அறி வித்தது கடிகாரம். வாயிற்புற வராந்தாவில் கணவன் ரகுநாதனின் காலணிகள் காணப் படாததிலிருந்து அவன் இன்னும் அலுவலகத் திலிருந்து திரும்பி வரவில்லை என்பதை உணர்ந்து நிம்மதிப் பெருமூச்செறிந்தாள். அவன் வருவதற்குள் நூல் கற்றையைப் பீரோவில் பத்திரப்படுத்த எண்ணித் தன் அறையை நோக்கி விரைந்தாள் சியாமளா. இது போன்ற நூல், மணி, கைவேலைச் சாமான்கள் என்றாலே அவள் கணவனுக்கு எரிச்சல் ஏற்படும்.

பொருளைப் பத்திரப்படுத்தி விட்டுத் திரும்புகையில் அவளருகே வந்த அவள் மைத்துனன், பத்து வயதுள்ள பாலு, ''மன்னி! எனக்குக் கணக்கு நோட்டு வாங்க வேண்டும். ஒரு ரூபாய் கொடு, மன்னி'' என்று கேட்டான்.

''நேற்றுதானேடா பாலு ஏதோ நோட்டுப் புத்தகம் வாங்க வேண்டுமென்று ஒரு ரூபாய் வாங்கிக் கொண்டு போனாய்?''

''அதற்குத் தமிழ் நோட்டு வாங்கி விட் டேன் மன்னி...''

''போன மாதம்தானே உங்கள் பள்ளிக்கூட வாத்தியாரையே கேட்டு விசாரித்து, எல்லாப் பாடங்களுக்கும் தனித்தனியாக நோட்டுகள் வாங்கிக் கொடுத்திருக்கிறேன். மறுபடியும் நீ இப்படி நோட்டு, புத்தகம், அது இது என்று...'' அவள் முடிக்கவில்லை. ''ம்..... ...ம்.....'' என்றவாறே கண்ணைக் கசக்க ஆரம்பித்து விட்டான் பாலு.

அப்பொழுதுதான் உள்ளேயிருந்து அங்கு வந்த பாலுவின் இளைய மன்னி, சியாமளா வின் ஓரகத்தி சுந்தரி, ''அச்சச்சோ.... ஏண்டா கண்ணு அழறே..?'' என்று கரிசனத் தோடு அவனை அணைத்துக் கொண்டாள்.

# என் தெய்வம்



இன்னும் பலமாகக் கண்களைத் தேய்த்துக் கொண்டே பாலு, ''பெரிய.... மன்னி.... கிட்டே நோட்டு வாங்கக் காசு கேட்டேன். திட்டினா.....'' விக்கினான். திகைத்தே போனாள் சியாமளா.

அவன் கண்களைத் துடைத்தவாறே சுந்தரி, ''பாவம், குழந்தை! இவன் என்ன கண்ணுபின்னு என்று செலவழிக்கக் கேட்கிறான்? — பாட புத்தகம்கூட வாங்கிக் கொடுக்கா விட்டால் எப்படித்தான் படிக்கிறதாம்?'' என்று கூறிவிட்டு, ஒரு ரூபாய் நோட்டைக் கொண்டு வந்து பாலுவிடம் கொடுத்தாள். புறங்கையால் கண்களைத் துடைத்துக் கொண்டே, ''சின்ன மன்னிதான் நல்ல மன்னி'' என்று கூறி ஓடி விட்டான் பாலு.

பதில் பேசாது தன் அறைக்குச் சென்று விட்டாள் சியாமளா. அவள் மனம், ''இந்தப் பத்து வயதில் இப்படிப் பொய் சொல்லிக் காசு வாங்கிக் கொண்டு போகும் பாலு இன்னும் பெரியவனானால் என்ன தப்புத்தான் செய்ய மாட்டான்? ம்... பிஞ்சு மனத்தை நல்வழியில் திருத்தாவிட்டாலும் தீய வழிகளில் காசைக் கரைக்க ஏன் இந்தச் சுந்தரி தூண்ட வேண்டும்? இந்தச் சிறு விஷயம்கூடவா தெரியாது....'' என்று சிந்திக்க, கைகள் வாங்கி வந்திருந்த பிளாஸ்டிக் நூல்களைப் பின்னித்து முடிச்சிட்டு அழகிய கூடை பாக்குவதில் ஈடுபட்டிருந்தன.

பாலு இப்பொழுது உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தான். தன் வகுப்புப் பிள்ளைகளோடு வெளியூர்களுக்கு உல்லாசப் பயணம் தானும் போக விரும்புவதாயும், அதற்கு ஐம்பது ரூபாய் கொடுக்க வேண்டும் என்றும் கேட்டான் சியாமளாவிடம் ஒரு நாள். தினசரி குடும்பச் செலவுக்கே இழுபறியாய் இருப்பதை எடுத்துக் காட்டினாள் சியாமளா.

''போகட்டும், மன்னி! அடுத்த வருஷமோ அதற்குப் பிறகோ பார்த்துக் கொள்ளலாம்.....'' என்று பாலு பணத்தின் மதிப்புணர்ந்து பேசியதைக் கண்டு மகிழ்ந்து போனாள் சியாமளா.

அப்பொழுது, ''என்ன மன்னி விஷயம்?'' என்று கேட்டுக் கொண்டே அங்கே வந்தாள் சுந்தரி. சியாமளாவும் சாதாரணமாக, ''ஒன்றுமில்லை, சுந்தரி! பாலுவின் பள்ளியில் உல்லாசப் பயணம் போகிறார்களாம். கேட்டான். உன் அண்ணா அவ்வளவு தூரமெல்லாம் அனுப்ப மாட்டாரென்றேன். அவனும் சரி என்றான்'' என்றாள்.

சுந்தரி, ''ஏன்? பள்ளிக் கூட்டத்துப் பிள்ளைகளோடு தானே போகப் போகிறான்? அத்தனை பேர்களுக்கும் காவலாக ஆசிரியர்கள் போகும்

ஆர். பத்மா



போது இவனுக்கு மட்டுமென்ன தனியாக...'' என்றாள் இழுத்தாற்போல்.

சியாமளா, ''அது சரி சுந்தரி. இவன் அண்ணா இவனை ஒரிடத்துக்கும் அனுப்பியதில்லை; தவிர, மொத்தமாக ஐம்பது ரூபாய் கட்ட வேண்டுமென்றால் நம்மால் முடியுமா?'' என்று கூறியதுமே, சுந்தரி சட்டென்று, ''ஓஹோ..... அதுதானா? ஐம்பது ரூபாய் என்று பணத்தைப் பார்த்தால் முடியுமா? இந்த வயதில் குழந்தைகள் நாலு இடங்களுக்குப் போய் வந்தால்தானே அவர்களுக்கு உலக அறிவும், பொது விஷயங்களும் வளரும்? நம்ம கஷ்டம்தான் இருக்கவே இருக்கிறது'' என்றாள். பிறகு தொடர்ந்து கூறினாள்: ''நாம் செய்யும் செலவுகளுக்கெல்லாம் கணக்கா பார்த்துக் கொண்டிருக்கிறோம்; அவசியம் அனாவசியம் என்று...''—இப்படிக் கூறுகையில் அவள் கண்கள் சியாமளாவின் கையிலிருந்த 'ஒயர்' கற்றைகளை நோக்கின குறிப்பாக.

சியாமளாவோ அப்பொழுதும் பொறுமையாக, ''ஏன், சுந்தரி! நம் நிலைமை தெரிந்தும் நீ இப்படிப் பேசறே? போன மாதம் மீரா உடம்பு சரியில்லாமல் படுத்துக் கொண்ட போதே வைத்தியம் மருந்துக்கென்று ஏகமாக ஆயிற்று. இதோ ஆயிற்று; அடுத்த மாதம் பண்டிகை வேறு வருகிறது; துணி மணி...'' என்று எடுத்துரைத்தாள்.

''ஆமாம்! என் குழந்தை மீரா படுத்துக் கொண்டதற்கு நீங்கள் மருந்து வாங்கிக் கொடுத்தீர்கள் என்பதை ஒன்றும் குத்திக் காட்ட வேண்டாம். நானோ 'அவரோ' ஒன்றும் அப்படி வக்கற்றுப் போய்விடவில்லை; 'அவர்' வந்ததும் அதற்கான பணத்தையும் வாங்கிக் கொடுத்து விடுகிறேன்'' என்றாள் சுந்தரி நிஷ்டூரமாக.

பதறிப் போன சியாமளா, ''ஐயையோ! நான் எது சொன்னாலும் உனக்கேன் இவ்வளவு விபரீதமாய்ப்படுகிறது சுந்தரி? சேகர் வேறு, மீரா வேறு என்ற பேதம் எனக்கு என்றுமே கிடையாது. பொதுவாகச் செலவு அதிகமாயிருக்கிறது என்று கூற வந்தேன்!'' என்றாள் கலங்கிய குரலில்.

மறு நாள் மாலை பள்ளியிலிருந்து வீடு திரும்பிய சேகருக்கும், பாலுவுக்கும் பலகாரம் கொடுத்துவிட்டு, கணவன் வருவதற்குள் முக்கால் பாகம் முடித்து வைத்திருக்கும் பையை முழுதும் முடித்து விடலாம் என்ற எண்ணத்துடன் 'பிளாஸ்டிக்' நூல் சகிதம் அமர்ந்தாள் சியாமளா.

மெதுவாக அவள் அருகில் வந்து அமர்ந்து கொண்ட பாலு தயங்கியபடியே, ''மன்னி, அண்ணாவிடம் உல்லாசப் பயணத்துக்கு.... கேட்டீர்களா மன்னி?'' என்று அவள் முகத்தை ஏறிட்டு நோக்கினான்.

வேதாளம் பழையபடி முருக்கை மரத்தில் ஏறிக்கொண்டதை உணர்ந்தாள் சியாமளா. ''ஏன் பாலு. நீ என்ன சின்னப் பையனா? சொன்னால் தெரிய வேண்டாமா? யாரோ என்னவோ சொன்னார்கள் என்பதற்காக...''

பாலு கனிந்த குரலில், ''நான் ஏதாவது கேட்டால் மட்டும் செலவு, விரயம் என்கிறீர்கள். நீங்கள் மட்டும் எப்பொழுது பார்த்தாலும் இந்த மாதிரி மணி, 'ஒயர்' 'நூல்' என்று வாங்கிக் கொண்டேயிருக்கிறீர்களே. இதெல்லாம் வாங்க எவ்வளவு செலவாகிறது என்று தெரிந்தால் மட்டும் அண்ணா திட்டமாட்டாரா?'' என்றான்.

''யார் போதனையிலடா நீ இப்படியெல்லாம் கேட்கிறாய்.....?

காத்திருந்தாற்போல் பாய்ந்து வந்த சுந்தரி, ''பாலு என்ன பச்சைப் பாப்பாவா, சொல்லிக் கொடுப்பதற்கு? புத்தி தெரிந்த வயதுதானே! எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருக்கிறான், கேட்கிறான்'' என்று பொரிந்தாள்.

ஒரு கணம் கண் மூடியிருந்த சியாமளா நிதானமாக, ''அப்போ.... நீ சொல்லியிருந்து பாலு என்னிடம் 'ஏன் நூல் வாங்கிறாய், துணி வாங்கிறாய் மணி வாங்கிறாய்' என்று கேட்டதெல்லாம் சரிதான் என்கிறாயா?'' என்றாள்.

''ஆமாம். உள்ளதைச் சொன்னால் யாருக்குத்தான் உறுக்காது.....'' என்று அரை குறையாய் முணுமுணுத்தாள் சுந்தரி.

இதற்கிடையில் பாலு பெரிய மனிதன் போல், ''சரி, சரி, என்னால் ஏன் உங்களுக்குச் சிரமம்? இனி எதற்கும் உங்களிடம் காசு, பணம் கேட்பதில்லை.....'' என்று கூறிவிட்டு விரக்தியடைந்தவன் போல், ''ம்... நீங்கள் கொடுத்துத்தான் ஆக வேண்டும் என்று என் தலைவிதியிருக்கிறதே. அதை எப்படி மாற்றுவது?'' என்று கூறிவிட்டு முகத்தைத் திருப்பிக் கொண்டான். மரமாய்ச் சமைந்து நின்றாள் சியாமளா.

அப்பொழுதுதான் அலுவலகத்திலிருந்து வீடு திரும்பிய ரகுநாதன் காதில் பாலுவின் கடைசி வாக்கியம் விழுந்து விட்டது. அலுவலக வேலைக் கடுமையால் களைத்து வந்தவனுக்குப் பாலுவின் சொற்கள் எரியும் தீயில் எண்ணெயை விட்டது போல் கோபத்தைக் கொழுந்து விட்டு எரியச் செய்தது.

பாலுவின் கரத்தை எட்டிப் பிடித்து இழுத்து, ''மடராஸ்கல். உன்னைச் செல்லம் கொடுத்து வளர்த்ததன் பலனாக அவளையே இன்று இவ்வளவு தூரம் பேசுகிறாயா?'' என்றவாறு 'பளீர்' 'பளீர்' எனப் பாலுவின் கன்னத்தில் அறைந்து விட்டு வேகமாகத் தன் அறைக்குச் சென்று விட்டான் ரகு.

குரோதத்துடன் தன்னை விழித்து நோக்கி விட்டு வெளியே செல்லும் மைத்துனனைத் தேற்றுவதா, களைப்பும், கோபமுமாகச் செல்லும் கணவனைத் தேற்றுவதா எனப் புரியாது கலங்கி நின்றாள் சியாமளா.

காலவெள்ளம் தன் போக்கில் உருண்டோடிக் கொண்டிருந்தது. சேகர் கல்லூரியில் சேர்ந்திருந்தான். சுந்தரியின் மகள் மீரா உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தாள். பாலு கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு, வேலைக்கு மனுக்கள் போட்டுக் கொண்டிருந்தான்.

அப்பொன்னான காலம் பாலுவை உருவத்தில் மட்டுமல்லாது உள்ளத்தளவிலும் பெரிதும் மாற்றியிருந்தது. சியாமளா செலவைக் கட்டுப்படுத்த எவ்வளவு கஷ்டப்படுகிறாள் என்பதை உணர்ந்தபோதும், சிறு வயதில் தான் அவளைப் படுத்தி வைத்த பாட்டை நினைக்கையிலும் அவனுக்கு வெட்கமாயும், வேதனையாயும் இருந்தது.



## உங்கள் வரிக் கணக்குகளுக்கு இந்த கதி நேரவிடக்கூடாது.

## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியாவிட மிருந்து உதவிபெறுங்கள்

வரி சம்பந்தப்பட்ட உங்கள் பிரசினைகளுக்குத் தனிப்பட்ட கவனம்தர நாங்கள் இருக்கிறோம், எம்மிடம் ஒப்படைக்கவும். வருமான வரி, சொத்து வரி, செல்வ வரி, வெகுமான வரி, செலவின வரி ஆகியவை சம்பந்தப்பட்ட புள்ளிக் கணக்குகளைத் தயாரித்து சமர்ப்பிக்கும் பணியை ஸ்டேட் பாங்கின் பெரிய அலுவலகங்கள் மேற்கொள்ளுகின்றன.

## ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா

**பாரத நாட்டின் தலைசிறந்த பாங்க்**

Aiyars SB.1909-TMP

அன்று தினத்தாளில் ஒரு விளம்பரத்தைப் பார்த்த போது, "நானூறு ரூபாய் சம்பளம். ஆனால் அதற்கு மூவாயிரம் டிபாசிட் கட்டச் சொல்லிறானே?" என்று கூறிப் பாலு பத்திரிகையில் குறிப்பிட்ட இடத்தைச் சுட்டிக்காட்டினான் சியாமளாவிடம். குனிந்து அதைப் படித்த சியாமளா, "ம்ஹூம்.... 'டிபாஸிட்' மூவாயிரம் தானே? ச்.... அதைப் பற்றி நீயேன் கவலைப் படுகிறாய்? அதற்கு நானாயிற்று...." என்றாள்.

திடுக்கிட்ட பாலு, "ஐயையோ! என்ன மன்னி? மூவாயிரத்துக்கு எங்கே போவது? பாவம், அண்ணா இருக்கும் நிலையில்....." என்றவனை அடக்கிவிட்டாள் சியாமளா.

மறு நாள் பாலுவிடம் ஒரு நீண்ட உறையைக் கொடுத்து, "உள்ளேயிருக்கிறது, விண்ணப்பத் தாள். பூர்த்தி செய்து கையெழுத்திடு" என்றாள் சியாமளா.

தீராத குழப்பத்தோடு, "நான் மாட்டேன் மன்னி! அண்ணாவுக்குத் தெரியாமல்....." என்னும் போதே குறுக்கிட்ட சியாமளா, "பார், பாலு! சத்தியமாக 'அண்ணா' சம்பாத்தியத்திலிருந்து ஒரு நயாபைசா எடுக்கவில்லை. இந்தப் பணம் பற்றி 'அவர்' ஒன்றும் கேட்டுக் கொள்ள முடியாது..." என்று கூறிக் கொண்டே நூறு ரூபாய்க் கற்றைகளை மேஜையின் மீது வைத்தாள்.

ஆயிற்று. அவன் கம்பெனியில் வேலையில் அமர்ந்து இருபது நாட்களாகி விட்டன. சியாமளா எப்படி மூவாயிரம் புரட்டினாள் என்பது அவனைப் பொறுத்தவரை புரியாத புதிராகவே யிருந்தது.

அன்று அலுவலகத்தில் பாலுவின் மேலதிகாரி அவனை அழைத்து, அன்று இரவே சிதம்பரம் போக வேண்டும் என்றும் கூறினார். மறுக்க முடியாமல் பாலு அன்றிரவே சிதம்பரத்துக்குப் போய்விட்டான். அங்கு எட்டு நாட்கள் தங்கியிருந்து வேலையை முடித்துக் கொண்டு சென்னைக்குப் புறப்பட்டான்.

'சூட்கேஸும்' கையுமாக வீட்டினுள் நுழையும் போதே அங்கு நிலவிய நிசப்தம் அவனைத் துணுக்குறச் செய்தது. 'ஹாலி'லேயே ஒரு கணம் தயங்கி நின்றபோது, உள்ளேயிருந்து விம்மியபடியே பேசும் சியாமளாவின் குரல் கேட்டது. "என்னை மன்னித்து விடுங்கள். இத்தனை வருஷமாக உங்களுக்குத் தெரியாமல் 'பிளாஸ்டிக்' நூல் பணி. 'ஒயர்' என்று கடைக்காரனிடம் வாங்கினேன், — ஆனால் பணம் கொடுக்காமல் தான்! ஒரு கூடைக்கு ஐந்து ரூபாய், ஆறு ரூபாய் என்று கூலி வாங்கிச் சிறுகச் சிறுகச் சேர்த்த பணம்தான் அந்த மூவாயிரம் என்றும் பாலுவுக்குச் சமயத்துக்கு எப்படி உதவியது பார்த்தீர்களா?" என்று கூறினாள்.

அண்ணா ரகுநாதன், "ஐயோ.... சியாமு! வீட்டு வேலைகள் போதாதென்று உடலை வருத்திக் கொண்டு நீ கஷ்டப்பட்டுப் பணம் வேறு சேர்த்திருக்கிறாயே!" என்றான்.

அறைக்கு வெளியே நின்று கொண்டிருந்த பாலுவுக்கு உடல் முழுதும் வியர்த்து விட்டது. மூளையில் பொறி தட்டியது.

முன்பு ஒரு நாள் சுந்தரியின் பேச்சைக் கேட்டுக் கொண்டு, சியாமளாவிடம், "நீங்கள் மட்டும் இந்த மாதிரி பிளாஸ்டிக் நூலெல்லாம் வாங்கலாமோ அண்ணாவுக்குத் தெரியாமல்.....?" என்று இடித்துரைத்தது நினைவுக்கு வந்தது. மனம் கலங்கியபடியே "மன்னி...." என்று கதவைத் தள்ளிப் பாய்ந்த பாலு, கட்டிலில் இளைத்துத் துரும்பாகி வலக்கையில் கட்டுடன் படுத்திருந்த சியாமளாவைக் கண்டதும் திடுக்கிட்டு விட்டான். அவள் அருகில் அமர்ந்திருந்த ரகுநாதன் எழுந்து கொண்டார். "வா, பாலு" என்று அழைக்கும் அவரைக் கவனியாமலே சியாமளாவிடம் ஓடி, "ஐயையோ! என்ன மன்னி இது? கையில் இவ்வளவு பெரிய கட்டு?" என்றவாறு கரத்தைப் பற்றிக் கண்களில் வைத்துச் சிறுபிள்ளை போல் கேவினான்.

சியாமளாவோ, "இதோ, பார்த்தீர்களா இருபத்திரண்டு வயதுக் குழந்தை வந்து விட்டது, மன்னியைத் தேடி." என்றாள். அவள் முகத்தில் புன்சிரிப்பு தவழ்ந்தது.

பன்முறை வற்புறுத்திக் கேட்டபின் ரகுநாதன் விளக்கினார்: "நீ ஊருக்குப் போன மறு நாள் தலைவலியாயிருக்கிறதென்று பிற்பகல் வீட்டுக்கு வந்து விட்டேன் நான். நடையில் செருப்புச் சத்தம் கேட்டதும், ஊசியில் மணிகளைக் கோத்துக் கொண்டிருந்த சியாமளா அவசரமாய் நான் பார்த்து விடப் போகிறேனோ எனப் பயந்து வேகமாக இழுத்தபோது ஊசி உடைந்து விரலிலும் ஏறிக் கொண்டு விட்டது. அதைப் பற்றி என்னிடம் கூடச் சொல்லாமல் தானே எடுத்துவிடப் பார்த்திருக்கிறாள். பாதி ஊசி உள்ளே போனது போனதுதான். துருப் பிடித்தது வேறு. கேட்க வேண்டுமா? 'செப்டிக்' ஆகிப் புண் புரையோடி விட்டது. நான்கு நாட்களாக ஜுரம் வேறு. நேற்று தான் 'ஆபரேஷன்' செய்து ஊசி வெளியே எடுக்கப்பட்டது" என்றார் வேதனையோடு.

பாலு, "ஐயோ, என் காரணமாக இவ்வளவு தொல்லையா? என்னை மன்னித்து விடுங்கள் மன்னி!" என்று விம்மினான்.

சியாமளாவின் கண்களில் பெருகிய ஆனந்தக் கண்ணீர் அவனுக்குப் பதில் அளித்தது.



மனைவி: சைக்கிள் வாங்கிக் கொடுத்தால்தான் பள்ளிக்கூடம் போவேன் என்று சின்னவன் அடம் பண்ணுகிறான்!

கணவர்: பெரியவன்?

மனைவி: ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுத்தால்தான் கல்லூரிக்குப் போவேன் என்று அடம் பண்ணுகிறான்!







ஜனார்த்தனம் பெரிய மனநோய் டாக்டர். அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய நாடுகளில் எல்லாம் பல ஆண்டுகள் தங்கியிருந்து அந்தத் துறையில் அரும் பெரும் ஆராய்ச்சிகள் செய்து நிபுணர் என்ற பெயரோடு தாய்நாடு திரும்பியவர். புத்திக் கோளாறினால் அவஸ்தைப் பட்டுக் கொண்டிருந்த பலருக்குச் சிகிச்சை செய்து குணப்படுத்திக் கைராசிக்காரர் என்று பெயர் வாங்கியவர்.

அன்று, டாக்டர் ஜனார்த்தனத்தினிடம் வந்த நோயாளியின் போக்கு மிகவும் விசித்திரமாயிருந்தது. கட்டின வேஷ்டியை 'டார்டார்' என்று கிழித்துக் கொண்டு விடுகிறான் என்பதைத் தவிர அவனிடம் சித்தஸ்வாதீனம் இல்லாதவன் என்பதற்கு எவ்வித அறிகுறியும் இல்லை. அவன் யாரோடும் பேசுவதில்லை. வேஷ்டியைத் தோரணமாகக் கிழித்துக் கொண்டு ஒரு மூலையில் மந்தகாசத்துடன் அமர்ந்திருந்ததைத் தவிர அவன் வேறு எந்தக் கோணலான காரியமும் செய்யவில்லை.

டாக்டர் ஜனார்த்தனத்துக்கு அவனைக் குணப்படுத்திவிட முடியும் என்று தோன்றியதைப் பைத்தியக்கார யோசனை என்று சொல்ல முடியாது. பல பைத்தியங்களைப் பார்த்தவராயிற்றே அவர்!

மூன்று மாத காலம் அந்தப் பைத்தியத்தோடு போராடினார் டாக்டர்; எத்தனையோ விதமான சிகிச்சைகளைச் செய்து பார்த்தார். அவன் எவ்வளவோ மாறிவிட்டான் — ஆனால் வேஷ்டியைக் கிழிப்பது மட்டும் மாறவில்லை. டாக்டருக்கே பைத்தியம் பிடித்துவிடும் போல் ஆகிவிட்டது.

ஆழ்ந்த ஆலோசனையோடு பைத்தியம் பிடித்தவர் மாதிரி டாக்டர் ஜனார்த்தனம் இரவில் தோட்டத்தில் வெகு நேரம் உலாவினார். அவர் சிந்தனையில் பளிச்சென்று ஒரு யோசனை உதித்தது. மறுநாள் காலை வழக்கம் போல் ஆஸ்பத்திரிக்குப் புறப்படும்போது மிகவும் உற்சாகமாகக் காணப்பட்டார், டாக்டர்.

முதலெடுப்பிலேயே தம் புதிய நோயாளியிடம் போனார். ''நான் சொல்லப்போவதை மிகவும் கவனமாகக் கேள். இனிமேல் நீ உன் வேஷ்டியைக் கிழிக்கக் கூடாது. ஒவ்வொரு நாளும் மாலையில் உன்னைப் பார்ப்பேன். வேஷ்டியைக் கிழித்துக் கொள்ளாமல் இருந்தாயானால் தினந்தோறும் உனக்கு ஐந்து ரூபாய் கொடுப்பேன். என்ன சொல்கிறாய்?'' என்று டாக்டர் அவனிடம் மிகவும் அன்பாகக் கேட்டார்.

இதைக் கேட்டதும் பைத்தியத்தின் முகம் தெளிந்தது. மிகுந்த குதூகலத்துடன் தலையை ஆட்டிச் சம்மதம் தெரிவித்தது.

அதைப் பார்த்ததும் டாக்டருக்கும் நம்பிக்கை பிறந்தது. ''என்ன, இன்று மாலை வருவேன். ஜாக்கிரதை! ஞாபகம் வைத்துக் கொள்...'' என்று கூறிவிட்டுத் தம் வேலையைக் கவனிக்கச் சென்றார்.

மாலை வந்தது. டாக்டர் அந்தப் பைத்தியத்தைப் பார்க்கச் சென்றார். என்ன ஆச்சரியம்! வழக்கம்போல் அவன் வேஷ்டியைக் கிழித்துக் கொள்ளவில்லை. டாக்டர் முகத்தில் திருப்தி நிலவியது. உடனே ஓர் ஐந்து ரூபாய் நோட்டை எடுத்து அவனிடம் கொடுத்தார். அவன் மிகவும் நன்றியோடு அதைக் கை நீட்டி வாங்கிக் கொண்டான்.

அன்று திங்கட்கிழமை. அன்றைய தினத்திலிருந்து டாக்டர் தினந்தோறும் மாலையில் அவனைச் சந்தித்து ஐந்து ரூபாய் கொடுத்து வந்தார். அவனும் பைத்தியமாயிராமல் அதை ஒழுங்காக வாங்கிக் கொண்டான்.

இப்படி அந்த வாரம் முழுவதும் நடந்தது. திங்கட்கிழமையிலிருந்து சனிக்கிழமை வரையில் அவன் வேஷ்டியைக் கிழித்துக் கொள்ளாமல் பைத்தியம் தெளிந்தவனைப் போல் காணப்பட்டான்.

டாக்டர் ஜனார்த்தனத்துக்கு ஆனந்தம் தாங்கவில்லை. இந்தப் பைத்தியத்தை மட்டும் குணப்படுத்திவிட்டால் அது அவர் தொழிலில் ரிக்கார்டு ஏற்படுத்திவிடும்.

ஞாயிற்றுக் கிழமையன்று வழக்கம்போல் மாலை நேரத்தில் மிகவும் உற்சாகத்துடன் அந்தப் பைத்தியக்காரனைக் காணச் சென்றார் டாக்டர்.

இது என்ன அநியாயம்! அந்தப் பைத்தியம் வேஷ்டியை எப்போதும் போல் தோரணமாகக் கிழித்துக் கொண்டு அந்தக் கிழிசலோடு உட்கார்ந்திருந்தான்.

டாக்டருக்குத் 'திக்' என்றது.

''ஏன் இன்று ஒப்பந்தத்தை மீறினாய்? உனக்குப் பணம் கொடுக்க மாட்டேன்'' என்றார்.

பைத்தியக்காரனுக்கு ஆத்திரம் தாங்கவில்லை. ''இது என்ன அக்கிரமம்? நீங்கள் சொன்னபடி ஒரு வாரம் ஒழுங்காக நடந்து கொண்டேனே, இல்லையா...?'' என்று பலமாகக் கத்தினான்.

''....ஆமாம். யார் இல்லை என்றது? இன்றைக்கு மட்டும் உனக்கு என்ன கேடு வந்தது? பழையபடி வேஷ்டியைக் கிழித்துக் கொண்டு நிற்கிறாயே...?'' டாக்டர் மிகவும் கோபமாகக் கேட்டார்.

''இன்றைக்கு என்ன கேடு என்று கேட்கிறீர்கள்? இன்றைக்கு ஞாயிற்றுக்கிழமை இல்லையா? இன்றுகூட எனக்கு லீவு கிடையாதா?'' என்று இரைந்தது பைத்தியம்.

டாக்டர் ஜனார்த்தனத்துக்கு மூளை குழம்ப ஆரம்பித்து விட்டது.

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

வெள்ளை
டெட்
சலவையின்
மேன்மை
வெண்மை
யுடன்
தூய்மை




வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பாழாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட். பம்பாய்

Shilpi SOM 18TAM

REGISTERED No. M. [illegible]
Registered as a Newspaper in Ceylon



